# குறள்வழி
# பிராகிருத இலக்கிய இன்பம்

இரா. மதிவாணன்

தாய்நாடு பதிப்பகம்
31, புகைவண்டி நிலையப்பாதை
வில்லிவாக்கம், சென்னை-49.

விலை உரு. 3-50

## BIBLIOGRAPHICAL DATA


| | | | |
|---|---|---|---|
| 1. | Title of the book | — | Kuralvali Prākritha Ilakkiya Inbam |
| 2. | Language | — | Tamil |
| 3 | Edition | — | First |
| 4 | Date of Publication | — | December 1978. |
| 5. | Author | — | R. Madhivanan |
| 6. | Copy right holder | — | Publisher |
| 7. | Paper used | — | 11.1 k.g. |
| 8. | Size of the Book | — | Crown 1/8 |
| 9. | Printing types used | — | 14,12,10 Points |
| 10. | Number of Pages | — | 92 |
| 11. | Number of Copies | — | 1000 |
| 12. | Artist | — | |
| 13. | Printer | — | Elango Achukoodam. 166, R. H. Road. Madras-600004. |
| 14. | Binding | — | Ordinary |
| 15. | Price | — | Rs 3.50 |
| 16 | Publisher | — | Thai Nadu Pathippagam, 31, Rly. Station Road, Villivakkam, Madras-49 |
| 17. | Subject | — | Literature |
| 18. | Summary | — | Some Prakrit poems-resembling Kural Teachings |
| 19. | Call Number | — | 0,-, 1B6T, T: g (0, 151) |

# அணிந்துரை

டாக்டர்
**சி பாலசுப்பிரமணியன்,**
எம். ஏ., பி.எச்டி.,
தமிழ்த்துறைப் பேராசிரியர்
& தலைவர்
சென்னைப் பல்கலைக்கழகம்,

சென்னை-600005
12—12—78

தமிழ்மொழி பழமையும் சிறப்புமுடைய மொழியாதல் போலவே பிராகிருத இலக்கியமும் தொன்மையும் பெருமையும் வாய்ந்ததாகும். பல்லவர் ஆட்சியின் தொடக்க காலத்தில் பிராகிருத மொழி அரசர்களின் ஆணை மொழியாக, ஆட்சி மொழியாகத் துலங்கியது. அதனால், அக்காலத்தே அம்மொழி சிறந்த பல இலக்கியச் செல்வங்களை ஈன்றெடுத்தது.

பழந்தமிழ் இலக்கியத்திற்கு அகப்பாடல் மரபும் புறப் பாடல் நெறியும் அமைந்திருத்தல் போலவே, பழம் பிராகிருத இலக்கியத்திலும் காதற்பாட்டுகளும், கடமையுணர்வுப் பாட்டு களும் மிகுந்திருக்கக் காணலாம்.

ஏமச்சந்திரர் என்னும் அருக சமயத்தைச் சார்ந்த புலவர் பிராகிருத இலக்கண நூல் ஒன்று செய்துள்ளார். அந்நூலில் உரை மேற்கோளாகச் சில பிராகிருத இலக்கியப் பாடல்களைப் பெய்துள்ளார். அப்பாடல்கள் அகமும் புறமும் பற்றியன வாகும்.

இந்த இலக்கியப் பாடல்களைப் பழகுதமிழ்ப் பண்பாளரும் பன்மொழி நூலறிஞரும், ஆராய்ச்சி வித்தகரும், அருங்குணச் செம்மலுமாகிய நண்பர் திரு. இரா. மதிவாணன் அவர்கள் மொழி பெயர்த்துள்ளார். அகப்பாடல்களைக் காதல் நினைவுகள்

என்றும், புறப்பாடல்களைக் கடமையுணர்வுகளென்றும் குறிப்பிட்டுக் காட்டியிருக்கும் நுண்ணறிவு விழுமியதும் போற்றத் தக்கதுமாகும். இவ்வகைப் பாடல்களுக்கு மேலும் விளக்கந் தந்து புது மெருகு கூட்டி, அப்பொருளுரைக்குப் பொருத்தமான குறட்பாக்களைத் தேர்ந்தெடுத்து அவற்றைத் தாம் தந்திருக்கும் தலைப்பினையடுத்து அமைத்துள்ளார். இந்நூல் பிராகிருதப் புலவர்களின் கற்பனைச் சிறப்பினைக் கவினுறக் காட்டி நிற்கிறது என்கிறார் நூலாசிரியர். ஆம்: அஃது உண்மைதான். ஆயினும், மேலும் ஓர் உண்மையும் உளங் கொளத் தக்கது; குறிப்பிடத்தக்கது. அது, நண்பர் மதிவாணன் அவர்கள் தம் மதி நுட்பத்தாலும், சிந்தனை வளத்தாலும், எண்ணத்தின் ஏற்றத்தாலும் எத்துணையளவு கவிஞராக வீறிட முடியும் என்பதனையும் இந்நூல் கொண்டு புலப்படுத்தியுள்ளார் என்பதாகும்.

சான்றிற்கு ஒன்றிரண்டு காண்போம்.

கணவனைப் பிரிந்து நிற்கும் காரிகை ஒருத்தி. அவள் தன் கையிரண்டையும் உயரத் தூக்கிக் கொண்டு நடக்கிறாள். அவள் பைத்தியமா? இல்லை. பின் ஏன் அவ்வாறு செய்கிறாள்? அவள் கணவன் அவளை விட்டுப் பிரிந்து சென்றிருக்கிறான். பிரிவுத் துன்பத்தைத் தாங்கிக் கொள்ள முடியாத அவள் உடல் மெலிந்தது. கைகள் மெலிந்து சிறுத்து விட்டன. எனவே கை வளையல்கள் கீழே விழத் தொடங்கிவிட்டன. மங்கல மகளின் கை வளையல்கள் கைகளிலிருந்து கழன்று நழுவிக் கீழே விழுந்து உடையலாமா? அவ்வாறு உடைந்தால் அஃது அமங்கலச் செயல் ஆகி விடுமன்றோ? எனவே தான் அவள் தன் இரு கைகளையும் உயர்த்திக் கொண்டு நடக்கிறாள். மேலும், நீரில் ஆழம் காண மூழ்குபவர்கள் கையை உயர்த்திக் கொண்டு மூழ்குவார்கள் அன்றோ? அம்முறையில் இவளும் தன் ஆருயிர்க் கேள்வனைப் பிரிந்ததால் உண்டாகிய துன்பக் கடலில் மூழ்கிக் கொண்டிருக்கிறாளாதலின், அத் துன்பக் கடலின் ஆழத்தைக் காட்டுவதற்காகத் தன் கைகளைத் தலைக்கு மேல் உயர்த்திக் காட்டுகிறாள்.

இந்தச் சித்திரம் நம் நெஞ்சை அள்ளுகின்றது. அறிவார்ந்த சிந்தையில் குடி கொள்கிறது. உணர்வலைகளை எழுப்புகின்றது எனலாம். நம் சங்க இலக்கியப் பாடல் தரத்தோடும் திறத்தோடும் ஒப்பிட்டு உணர்ந்து உவமை கொள்ளத்தக்கது.

இனி, புறப்பாடலுக்கு ஓர் எடுத்துக்காட்டுக் காண்போம்.

உலகில் நல்லவர்கள் நிறைந்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் வல்லவராக இருப்பதில்லை. வல்லவராக, ஒரோ வழி அவர்கள் இருந்தாலும் அவர்கள் ஒன்று பட்டுச் செயல் புரிவதில்லை. ஆனால், நன்மை என்பதன் பக்கம் நிற்காத இந்தப் பொல்லாத வல்லவர்கள் இருக்கிறார்களே, இவர்கள் ஆங்காங்கே ஒரு சிலராகத் தனித்திருந்தாலும், தீச்செயல் புரிவதற்குப் படை திரள்வது போன்று ஒன்று திரண்டு விடுகிறார்கள்.

ஆயிரம் பேர் வாழும் சிற்றூரில் ஐந்து கள்ளர்கள் கன்னம் வைத்துத் திருடி அந்த ஊரில் கொள்ளையிட்டு அந்த ஊரையே கலக்குகிறார்கள். எழுபத்தைந்து பிள்ளைகள் நல்லவர்களாய், ஒரு வகுப்பில் இருக்க, ஐந்து பேர் பொல்லாதவர்களாய், வல்லவர்களாய் அமைந்து எளிய ஆசிரியர் வகுப்பறைக்கு வந்தால் வன்பு செய்துஅவர் பாடம்பயிற்றுவிக்கவே இயலாமல் செய்து விடுகிறார்கள். அந்த வகுப்பில் இருக்கும் எழுபத்தைந்து நல்லவர்களும் ஒன்று சேர்ந்து விட்டால் அவ்வகுப்பின் அமைதி கெடாது. ஆனால், அஃது எளிதாக நடப்பதில்லை.

எனவேதான் சான்றோர் பெருந்தகையாம் மு. வ. அவர்கள் "தம்பி, நீ நல்லவனாக வாழ்ந்தால் மட்டும் போதாது. வல்லவனாகவும் வாழ வேண்டும்" என்றார்கள்.

'நல்லவரும் வல்லவரும்' (ப. 56 57) என்னும் தலைப்பமைந்த காட்சி விளக்கத்தின் இறுதியில் ஆசிரியர், "நல்லவர்கள் ஒன்று சேர்வதில்லை. வல்லமையை வளர்ப்பதில்,

ஆற்றலும் பண்பும் ஒருசேர வளர்வதில்லை நல்லவர் வல்லவ ராகும் போது நாடு வாழும்'' என்று பொருத்தமுறப் புகன் றுள்ளார்.

நாயன்மார் அறுபத்துமூவர் போல் அறுபத்து மூன்று காட்சிகளை அருமையாகப் படம் பிடித்துக் காட்டியிருக்கும் நண்பர் திரு இரா. மதிவாணன் அவர்கள் தமிழிற்கும் தமிழி னத்திற்கும் தமிழ்நாட்டிற்கும் பயன்படும் நல்ல தொண்டுகளை நாடிச் செய்து வருகிறார். நல்ல பல நூல்களை நாட்டிற்கு வழங்கி வரும் அவர்தம் தமிழ்த்தொண்டு தொடர்வதாக. தமிழ்கூறு நல்லுலகம் அவர்தம் அரிய படைப்புகளை உரிய முறையில் போற்றிப் பயன் கொள்வதாக. வாழ்த்துகள்.

சி. பாலசுப்பிரமணியன்



# முன்னுரை

தமிழிலக்கியத்தைப் போன்றே பிராகிருத இலக்கியம் காதல் நினைவுகளையும் கடமை உணர்வு களையும் உள்ளங் கவரும் ஓவியமாக்கிக் காட்டும் தன்மை வாய்ந்தது.

ஏமச்சந்திரர் எனும் அருகசமயத்தைச் சார்ந்த புலவர், தான் எழுதிய பிராகிருத இலக்கண நூலில் உரை மேற்கோளாகக் காட்டிய நடுவணிந்திய பிராகிருத இலக்கியப் பாடல்களைத் தமிழாக்கம் செய்திருககிறேன்.

பிராகிருத மொழியைப் பாகத மொழி என்றும் கூறுவர். இன்றைய வட இந்திய மொழிகள் அனைத்தும் பிராகிருத மொழியிலிருந்து தோன்றியவை. ஆரியரின் வருகைககுப் பின் வடநாட்டில் பேசப்பட்ட தமிழின் திரிந்த வடிவமே பிராகிருத மொழியாக உருவெடுத்தது. சமற்கிருதத்தில் இல்லாத எகர ஒகரக் குறில் எழுத்துகள் பிரா கிருதத்திலும் பாலியிலும் இருப்பதும், சமற் கிருதச் சிறப்பெழுத்துகள் பிராகிருத மொழியில் இல்லாதிருப்பதும் இந்த உண்மையை வலியுறுத் துவனவாகும். திரவிட மொழிநூல் வல்லுநரும்

சமற்கிருதப் பேராசிரியருமாகிய பேராசிரியர் டி. பரோ அவர்களும் இக்கருத்தினை Collected Papers on Dravidian Linguistics என்னும் நூலில் புலப்படுத்தியிருக்கிறார்.

ஆரிய அரசன் யாழ்ப்பிரமதத்தன் தமிழ் கற்க விரும்பியதும் கபிலர் அவனுக்காகக் குறிஞ்சிப் பாட்டை இயற்றியதும் நாம் அறிந்ததே. இதன் வாயிலாக, வடநாட்டார் தமிழ்கற்பதில் ஊக்கம் செலுத்தினர் என்பதும் வடநாட்டில் தமிழ் வழங்கியது என்பதும் ஐயத்திற்கிடமின்றி நாட்டப்படுகிறது. பிராகிருத இலக்கியங்களின் வாயிலாக, அக்காலத்திய வடபுலத்து மக்களின் பண்பாடு, வாழ்க்கை முறை, நாகரிகம், பழக்க வழககங்கள், இறை வழிபாடு ஆகிய அனைத்தும் தமிழ்ப் பாங்குடையன வாயிருந்தன என்பது தெளிவாகப் புலப்படுகிறது. ஆந்திர நாட்டு அகநானூறு என்னும் என்னுடைய நூலின் முன்னுரையில் இதனை மேலும் தெளிவுபடுத்தியுள்ளேன்.

பிராகிருத மொழியில் அழிந்தவை போக எஞ்சியுள்ள நூல்களைத் தமிழுடன் ஒப்பிட்டு ஆராயவும், பிராகிருத மொழியாய்வு நடத்தவும், பல்கலைக் கழகங்கள் முன் வருதல் வேண்டும். இவ் வகையில் பாலி மொழி ஆய்வும் நலம் சேர்க்கும்.

அகப்பாடல்களையும் புறப்பாடல்களையும் தனியாகவகைப்படுத்தி அப்பாடல்களின் நயத்திற்கு மேலும் விளக்கம் தந்து மெருகு கூட்டியிருக்கிறேன். பொருத்தமான குறட்பாக்களின் கருத்தை இவை மொண்டு நிற்பதைப் புலப்படுத்துவதே இந் நூலின் நோக்கம்.

பிராகிருதப் புலவர்கள் தம் கற்பனைச் சிறகுகளால் இலக்கிய வானில் எவ்வளவு உயரத்தை எட்டிப் பிடித்திருக்கிறார்கள் என்பதை இந்நூலைக் கண்ணுறும் ஓதாளர் (வாசகர்) உணர்வர்.

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிச் சிறப்பித்த சென்னைப் பல்கலைக்கழக தமிழ்த் துறைத் தலைவரும் பேராசிரியப் பெருந்தகையுமாகிய பர். சி. பாலசுப்பிரமணியனார் அவர்களுக்கு என் நெஞ்சுகந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை நன்முறையில் அச்சிட்டு உதவிய இளங்கோ அச்சுக்கூட உரிமையாளர் திரு எம் எஸ். மணியவன் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். தமிழுலகம் இத் தமிழாக்கப் படையலை ஏற்று ஊக்குவிப்பதாகுக.

சென்னை-49
8-11-78

**இரா. மதிவாணன்**

# உள்ளடக்கம்

## 1. காதல் நினைவுகள் (அகப்பாடல்கள்)

| எண் | பொருள் | பக்கம் |
|---|---|---|



2. கடமையுணர்வுகள் (புறப்பாட்டல்கள்)

—:o:—

## 1. இருவர்க்கும் வெற்றி !

"அலரெழ ஆருயிர் நிற்கும் அதனைப்
பலரறியார் பாக்கியத் தால்" (*குறள்—1141*)

போர்க்களம்; கொடும் போர்.

யார் வெற்றி பெறுவார்கள் என்று ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள் பொதுமக்கள்; போர் முடிந்தது.

இருபெருவேந்தரும் வென்றனர்.

இருபடைகளும் வென்றன !

இப்படிச் சொன்னால் யாராவது நம்புவார்களா? ஆம், உண்மைதான்.

இப்படித்தான் நடந்தது என்கிறாள் தலைவி. இவனுக்குப்போய் பெண்ணைத் தருவதா என்றார் கள் பெண்ணின் பெற்றோர்.

இவளைப் போய் மருமகளாக்கிக் கொள்வதா என்றார்கள் பையனின் பெற்றோர்.

ஆனால் காதலர் இருவரும் சந்தித்துக் கொண்டே இருந்தார்கள்.

ஊரெல்லாம் இதே பேச்சு. பேச்சா ? இல்லை காட்டுக் கூச்சல்.

இந்தக் காட்டுக் கூச்சலைக் கேட்டு பையனின் பெற்றோர்க்கும் காதடைத்துப் போய்விட்டது.

காது செவிடானதால் வாயும் ஊமையாகி விட்டது கண்மட்டும் பார்த்துக்கொண்டிருந்தது. பெற்ரோர்களின் மனப்போராட்டப் போர்க்களத்தில் திருமணத் தேரோட்டம் நடந்துமுடிந்தது. காதலர் இருவரும் போரில் வெற்றிபெற்று விட்டார்கள்.

## 2. துயரக் கடலின் ஆழம் காண்கிருள்.

''துறைவன் துறந்தமை தூற்ருகொல் முன்கை
இறையிறவா நின்ற வளை'' (குறள்—1157)

அதோ !

அந்தப் பெண் இரண்டு கைகளையும் உயரத் தூக்கிக் கொண்டு நடக்கிருள்.

இப்படி ஒரு பெண்ணை நீங்கள் எங்காவது பார்த்திருக்கிறீர்களா? பைத்தியக்காரக் குழுவில் பார்த்திருக்கக்கூடும்.

ஆனுல், அவள் பைத்தியம் பிடித்தவள் அல்லள்; நன்ருகத் தானிருக்கிருள்.

கணவனைப் பிரிந்த அவள் உடல் மெலிந்தது; கைகளும் மெலிந்து விட்டன.

கை வளையல்கள் தானுகக் கழன்று விழுகின்றன. மங்கல மகளின் கைவளையல்கள் கீழே விழுந்து உடையலாமா?

தன் கைவளையல்களை அவற்றுக் கேற்படவிருக்கும் கேட்டிலிருந்து காப்பாற்றுவதற்காகத்

தான் இப்படிக் கைகளை உயர்த்திக் கொண்டு நடக்கிறாள்.

ஆனால் அவளுடைய தோழி வேறு காரணம் சொல்கிறாள்.

நீரில் ஆழம் காண மூழ்குபவர்கள் கையை உயர்த்திக் கொண்டு மூழ்குவார்கள்.

அதுபோல,

இவள் தன் கணவனைப் பிரிந்ததால் உண்டாகிய துன்பக் கடலில் மூழ்கிக் கொண்டிருக்கிறாள். அத்துன்பக் கடலின் ஆழத்தைக் காட்டுவதற்காகக் கைகளை உயர்த்திக் கொண்டிருக்கிறாள். தோழி சொல்லும் காரணம்தான் சரியான காரணம் போலும்!

## 3. அலையாய் அலைகிறாள்.

"இன்னா தினனில்லூர் வாழ்தல் அதனினும்
இன்னா தினியார்ப் பிரிவு" (குறள்—1158)

செல்வம் சென்று கொண்டேயிருக்கும். ஓரிடத்திலும் நிலையாக நிற்காது.

சக்கரத்தின் சுழற்சிக்குச் செல்வத்தை ஒப்பிட முடியாது.

சக்கரம் தான் சுழலத் தொடங்கிய இடத்தை மீண்டும் தொடும்.

ஆனால் செல்வம் முன்பு சேர்ந்தவனிடத்திலேயே மீண்டும் போய்ச் சேராது.

கைமாறிச் சென்று கொண்டேயிருக்கும். பேய் போல் அலையும் என்றும் சொல்லமுடியாது;

பேய்க்கு நோக்கமில்லை;

செல்வத்திற்கு நோக்கமுண்டு.

அலையாய் அலைகிறது என்று சொல்ல முடியாது, அலை ஒரு திசை நோக்கிப் பாயக்கூடியது.

பின்னே எதை உவமையாகச் சொல்வது! என்று தவிக்க வேண்டாம்.

இதோ! கணவனைப் பிரிந்து அவன் வருகையை எதிர் நோக்கியிருக்கிறளே! இந்தப் பெண்ணை உவமையாகச் சொல்லுங்கள்.

இவள் இருப்பது வீடாயினும் வீட்டின் ஓரிடத்தில் கொஞ்ச நேரம் தங்கமாட்டேன் என்கிருள். சிறிது நேரம் கட்டிலில் சாய்கிருள்; பின் தொட்டிலில் அமர்கிருள்; அடுத்த நொடி தூணில் ஒட்டி நிற்கிருள்; கதவோரம் போகிருள்; வாயிற் படியில் தவமிருக்கிருள்; தண்ணீர் குடிக்கிருள்.

தவிப்பு அடங்கவில்லை. வீட்டுக்குள்ளே அலை பாய்ந்து திரிகிருள். இவளைப்போல்தான் செல்வம் ஓரிடத்தில் நிற்காமல் சுழன்று வருகிறது.

## 4. உங்களைப்பற்றிய செய்தி யாருக்கு வேண்டும்?

“சொல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை” (குறள்—1151)

அவளைப் பிரிந்ததிலிருந்து அவனுக்கு உறக்கமே வரவில்லை.

என்ன நினைத்துக் கொள்வாளோ என்று ஒரு தூது அனுப்பினான்.

தூதுவன் போய் செய்தி சொன்னான். விரைவில் தங்கள் கணவர் திரும்பிவர இருக்கிறார் என்று தூதுவன் சொன்ன செய்தி அவளுக்கு மகிழ்ச்சி தரவில்லை.

வரப்போகிறார் என்ற செய்தியும் வராமல் இன்னும் சிலநாள் அங்கேயே தங்கியிருப்பார் என்னும் செய்தியும் இரண்டும் ஒன்றே வெறும் செய்திகளால் என்ன பயன்?

நான் அவருக்கு எந்தச் செய்தியும் அனுப்ப மாட்டேன்.

கனவில் கண்ட நீர் வேட்கை தணிக்காது.

தூதுச் செய்தியும் காதல் கடிதமும் கவலைக்குதவாது.

என் கண்கள் அவரை நேரில் காண விழைகின்றன.

அவர் எப்பொழுதும் கண்ணுக்கு எட்டுபவராக இருக்க வேண்டும்.

அவர் என் காதுக்கு எட்டுபவராக இருக்க வேண்டியதில்லை.

நான் அவரைக் காதுகளினலா பார்க்கிறேன்? அவர் என் கண்ணில் குடியிருப்பவர்; காதுகளில் அல்ல என்று சொல்லிவிட்டாள்.

## 5. நனைகிறது காய்கிறது.

"உழந்துழந்து உண்ணீர் அறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்." (குறள்—1177)

தலைவியைப் பிரிந்து வேற்றூரில் தங்கியிருந்தான் தலைமகன்.

தன் மனைவி எப்படி இருக்கிறாளோ என்ற ஏக்கம் அவனை வாட்டியது.

அன்று தன்னூரிலிருந்து வந்த ஒருவன் எதிர்ப்பட்டான். மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது.

'என் மனைவி எப்படியிருக்கிறாள் பார்த்தாயா' என்றான்.

'பார்த்தேன். அவள் மணிக்கொருமுறை கண்ணீரில் நனைகிறாள். அவள் மேலாடை நனைகிறது.

மீண்டும் பெருமூச்சு விடுவதால் அந்த ஆடை காய்கிறது.

நாள்முழுதும் பலமுறை அவள் ஆடை நனைவதும் காய்வதுமாயிருக்கிறது.

நீங்கள் ஊர்போய்ச் சேர்ந்தால் உங்கள் மனைவியின் கண்ணீர் நிற்கும். அவள் அணிந்த ஆடைகளுக்கு ஓய்வு கிடைக்கும், என்றான் அந்த வழிப்போக்கன்.

## 6. பிரிவு எரித்தது.

"தொடிற்சுடின் அல்லது காமநோய் போல
விடிற்சுடல் ஆற்றுமோ தீ" (குறள்—1159)

வணிகம் செய்து பொருள் திரட்டுவதற்காகப் பிரிந்து மீண்டும் நேற்றுதான் என் கணவர் வீடு வந்து சேர்ந்தார்.

அவர் வழியிடைக் கண்ட காட்சி ஒன்றை விவரித்தார். நெஞ்சுருக்கும் கண்ணீர்க் காவியம் அது.

அன்பு மனையாளைப் பிரிந்த ஒருவன் பிரிவின் துயரால் வருந்தினும் பிரிவுத் துயரை அவனால் சிறிதும் தாங்கிக் கொள்ள முடியவில்லையாம்.

நடுக்காட்டில் யார் அவனுக்கு ஆறுதல் சொல்ல முடியும்? மயங்கிக் கிடந்தவனை வழியிடைச் சென்ற என் கணவரும் பிறரும் உண்டியும் நீரும் உதவி காரணம் கேட்டார்களாம்.

தன் பிரிவுத் துயரை அரைகுறையாகச் சொல்லி ஆவி துறந்தானும்.

பிரிவெனும் துயரத் தீயால் உள்ளம் வெந்து உயிர்விட்ட அவனை, இருந்தவர்களெல்லாம் விறகுத் தீயால் சுட்டு அவனுடலைச் சாம்பலாக்கி, அச்சாம்பலை அவனுடைய சொந்த ஊருக்கு அனுப்பி வைத்தார்களாம்.

அவனே பிரிவைத் தாங்காதவனாயின் அவனுடைய அன்பு மனைவி அவனுக்கும் முன்பே இறந்து விட்டிருப்பாளல்லவா?

யார் முன்னே இறக்கிறார்களோ அவர்கள் தன் அன்பின் பெருக்கை அளவிட்டுக் காட்டி விடுகிறார்கள்.

## 7. நீந்தும்போது படகு ஏன் வந்தது?

"வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கு மிடத்து" (குறள்—1124)

தோழா! 'திருமணமான புதிதில் தலைவியை ஏன் பிரிந்து வந்தாய்' என்று கேட்கிறாய்.

என்னால் தலைவியை ஒருநாள், ஏன் ஒரு மணி நேரம் கூட பார்க்காமல் இருக்க முடியாது.

இந்நிலையில் அவளைப் பிரிவதைப் பற்றி நான் நினைக்கவே இல்லை. பிரிந்து வரும் எண்ணம் எனக்கு ஏற்கனவே இருந்ததும் இல்லை.

இப்படித் திடீரென்று சில நாட்கள் பிரிய நேர்ந்தது எனக்கு ஏமாற்றமாக இருக்கிறது.

ஒருவன் நீந்தக் கற்றுக் கொண்டு நல்ல நீர் நிலையில் நீந்திக் கொண்டிருக்கும் போது அவனை ஏற்றிச் செல்ல எதற்காகப் படகு வரவேண்டும்? படகின் உதவியை யார் வேண்டினார்கள்? நீந்தக் கற்றுக் கொள்ளுமுன்பு அல்லது நீரில் நெடுந் தொலைவு செல்ல வேண்டிய நேரத்திலல்லவா இந்தப் படகு வந்திருக்கவேண்டும்

இந்தப் படகுக்கு நேரம் காலம் தெரியவில்லை; இந்தப் பிரிவுக்கும் நேரம் காலம் தெரியவில்லை.

தொழில் கருதி அல்லது கடமை கருதி பிரியும் பிரிவுகளே ! நீங்கள் காதலர்களை மட்டும் சந்திக்காதிர்கள்.

## 8. தொலைவு ஒரு பொருட்டன்று

"கண்ணுள்ளிற் போகார் இமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர்" (குறள்—1126)

என் கணவர் வேற்று நாட்டுக்குச் சென்றிருக்கிறார். தோழி ஐயப்படுகிறாள்.

பிரிந்து சென்றவர் நீண்டநாள் நெடுந் தொலைவான ஊரில் தங்கிவிட்டால் உற்றவரையும் மறந்து விடுவாரோ என்று.

கண்ணுக்கு மறைவானது கருத்துக்கும் மறைவாய் விடும் என்பது அவள் எண்ணம்

காதலர்க்கு மட்டும் இது பொருந்தாது;

என்னுருவம் அவர் கண்ணைவிட்டு அகலாது;

அவர் கருமணியினுள் உள்ள பாவை நான்.

கண்ணைவிட்டகலாத போது கருத்தைவிட்டும் அகலமாட்டேன்.

என் கண்ணிலும் கருத்திலும் அவர் நிலையாகக் குடியிருக்கிறார்.

நிலவுக்கும் கடலுக்கும் எவ்வளவு தொலைவு !

முகிலுக்கும் மயிலுக்கும் எத்தனை வேறுபாடு !

இவை எப்படி ஒன்றை ஒன்று கவர்கின்றன?

காதலர்களின் நெருக்கத்திற்கும் உள்ளன்பிற்கும் இடைவெளியாய் நிற்கும் தொலைவு ஒரு பொருட்டன்று.

## 9. எந்தக் கண்கள் ?

"உவந்துறைவர் உள்ளத்துள் என்றும் இகந்துறைவர்
ஏதிலர் என்னுமிவ் வூர்" (குறள் —1130)

ஆயர்பாடியில் ஆயிரம் கோபியர் இருக்கிறார்கள்.

எல்லாரும் தான் கண்ணனை விரும்புகிறார்கள்; அவன் குழலூதினால் போதும் குழுமிவிடுகிறார்கள்.

ஆட்டமென்ன ! பாட்டென்ன !

கண்ணன் அத்தனைப் பேரையும் விரும்புகிறான், ஆனால் உயிராக விரும்புவது யாரை ?

ஆயிரம் கோபியரின் நடுவில் கண்ணனின் கண்கள் இராதை இருக்கும் இடத்தையே அதிகமாக நாடுகிறது.

எந்தக் கண்களில் அளவு கடந்த ஆசையும் அன்பும் ஊற்றாய்ப் பெருக்கெடுத்து அவனுள்ளக் கடலில் அலைமோதித் தாலாட்டுகிறது என்பது அவனுக்குத் தெரியாதா என்ன?

என் கணவர் பல பெண்களோடு பேசுகிறார், பழகுகிறார் என்று சிலர் சொல்கிறார்கள் சொல்லட்டுமே!

எந்தப் பெண்ணும் என்னைப் போல் என் கணவரிடம் அன்பு செலுத்திவிட முடியாது என்பதில் எனக்கு அசையாத நம்பிக்கை உண்டு.

அவரும் என்னைத் தவிர வேறு யாரிடத்தும் நெஞ்சம் பறி கொடுக்கமாட்டார் அவர் இரட்டை நெஞ்சம் இரட்டை நா படைத்தவரல்லர்.

எங்களிருவரின் கண்கள் இரண்டிரண்டாக இருக்கும். பார்க்கும் பார்வை ஒன்றே. எந்தக கண்களில் குடியிருக்கிறோம் என்று அவருக்குத் தெரியும.

## 10. என்ன நடந்து விட்டது இப்படிப் பதைக்கிறாய்?

"பேணாது பெட்பவே செய்யினும கொண்கனைக்
காணாது அமையல கண" (குறள்—1283)

ஏனம்மா!

எதற்காக உனக்குள் நீயே குழம்புகிறாய்?

கலங்கிய நீர்நிலைபோல் தெளிவினறிப் பேசுகிறாய. இருள் சூழ்ந்த உலகிலதான் பகலும் தோன்றுகிறது அமைதியைத் தவழவைககும் சான்றோர்கள் மிகுந்திருக்கிற உலகததில்தான் போர்களும் கொளளைகளும் நடைபெறுகின்றன.

ஆற்று வெள்ளத்திற்கு நேராகத்தான் பாயத் தெரியும். இருப்பினும் அதன் போக்கு எத்தனைக் கோணல்மாணலாய் விடுகிறது.

உயர்ந்த கொடுமுடியையும் நீண்ட நெடும் பிலத்தையும் உயர்ந்த மலையடுக்கத்தில் நின்று பார்த்தால் தெரிந்து கொள்ளலாம்.

இதனையறிந்தும் நீ ஏன் தலைவரிடம் குறை கண்டு வருந்துகிறாய். அவரும் இந்த உலகத்தில் பிறந்தவர்தானே? மற்ற மாந்தரிடமும் இருக்கும் குறைகளில் ஒருசில அவரிடமும் இருக்கும்.

ஏதோ நெருங்கிய தோழி என்பதால் சொல்கிறேன். ஓதிம (அன்ன)ப்பறவை நீ. தலைவரின் குணங்களை மட்டும் கண்டு குறைகளைக் காணாதிரு.

## 11. அவரைப் போக விடு.

''விளியும்என் இன்னுயிர் வேறல்லம் என்பார்
அளியின்மை ஆற்ற நினைந்து'' (குறள் —1209)

தோழி அவரைத் தடுக்காதே ! அவர் என்னைப் பிரிந்து செல்லத் துணிந்து விட்டார்.

அவர் அவ்வளவு உறுதியோடு இருக்கும போது, நாம் மட்டும் மனவுறுதி இல்லாதவர்களா என்ன ?

பிரிவுத் துன்பத்தை 'அவரால் தாங்கிக் கொள்ள முடியும் என்றால் என்னாலும முடியும்.

அவர் என்மீது எவ்வளவு அன்பு வைத்திருக்கிறார் என்பதை அறிவதற்கு அவர் பிரிவு ஓர அளவு கோலாயிருக்கும்.

எனவே அவரைப் போகவிடு; நீ ஒன்றுமே பேசாதே. விலகி நின்று கொள; வேடிக்கை பார்.

அதோ! அவர் வாயிற்படியைக் கடக்கிறார். நிற்கிறார்; அவரால் என்னைவிட்டு நகர்ந்து எத்தனை

அடியெடுத்து வைக்க முடிகிறது என்று பார்க்கிறேன்.

அவரால் வாயிற்படியைக் கடக்க முடியும்; என் விழி எல்லையைக் கடக்க முடியாது. என் நோக்க வலை அவரை வீட்டில் கொணர்ந்து வீழ்த்தி விடும்.

## 12. நிலவே! நீயே உவமை.

**"கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோள் பேதைக்குப்**
**பெண்ணிறைந்த நீர்மை பெரிது"** (குறள்—1272)

தோழா! நிலவைப் பெண்ணின் முகத்திற்கும் நெற்றிக்கும் மட்டும் உவமை சொலகிறார்கள் இந்தப் புலவர்கள்.

புலவர்கள் செககு மாடுகள. ஒருவர் போன பாதையிலேயே அனைவரும் சுற்றுவார்கள்,

புலவர்கள் கிளிப்பிள்ளைகள. கிளி தானாக எதுவும புதிதாகச் சிந்திததுப் பேசுவதில்லை.

நிலவைச் சிறந்த இல்லறத் தலைவிக்கு முழுமை யாக ஒப்பிடலாம்.

நிலவு வளர்கின்ற காலததில வளர்ந்து கொண்டே போகிறது.

தேய்கின்ற காலத்தில் தேய்ந்து கொண்டே போகிறது. வளர்ந்தாலும் குறைந்தாலும் நிலவுக்கு

இருக்கும் பெருமை குறைவதில்லை. அதன் தண்ணொளியில் மாற்றம் இருப்பதில்லை. தேய்கின்ற காலத்தில் அது துயரத்தால் கருத்துப் போவதில்லை. ஒளிதர மறுப்பதுமில்லை. வளர்கின்ற காலத்தில் ஒளி வெள்ளத்தைக் கதிரவனைப் போல் அதிகமாக வீசிக் கண்கூசச் செய்வதுமில்லை.

வாழ்விலும், தாழ்விலும், செல்வத்திலும், வறுமையிலும் ஒரே சீராக வாழும் குலமகளைப் போல இந்த நிலா வாழ்கிறது.

கணவனின் வருவாய்க் கேற்ப ஒரே சீராக அகமலர, முகமலர வாழக்கை நடத்தித் தன் இல்லறத்தை நல்லறமாக்கும் குலமகளுக்கு இனி யாவது புலவர்கள் நிலவை உவமையாகச் சொல்வார்களா?

## 13. நீர்நிலையில் நீராவி.

''இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்
துன்பம் அதனிற் பெரிது'' (குறள்—1166)

குளிர் காலம்; எல்லா உயிர்களும் குளிரால் நடுங்குகின்றன.

காதலிருவரும் மார்கழி நீராட பளிங்குக்கல் பாவிய குளத்தில் இறங்கினார்கள்.

'குளிர் காலத்தில் குளத்து நீர் வெது வெதுப்பாக இருக்கிறது.

, இந்தத் தண்ணீரை யார் சூடாக்கினார்கள். வைகறைப் பொழுதிது. விடியற்காலையில் சூரிய வெப்பமும் இல்லை.

பின்னே எப்படி இந்தத் தண்ணீர் வெது வெதுப்பாக இருக்கிறது?

தலைவன் கேட்ட இந்தக் கேள்விக்குத் தலைவி மறுமொழி சொன்னாள்.

பிரிவுத் துன்பத்தால் வருந்தியவர்கள் யாரா வது நமக்கு முன் வந்து இந்தக் குளத்தில் மூழ்கி யிருப்பார்கள.

அவர்கள் உடலிலிருந்த வெப்பத்தால் தண் ணீர் வெந்நீராகி விட்டது. அவர்கள் விட்ட பெரு மூச்சே நீராவியாக வெளி வருகிறது தலை வனின் மனம் குளிர்ந்தது. தலைவியின் கண்ணில் குறும்பு மிளிர்ந்தது.

## 14. இதழில் இட்ட இலச்சினை

"உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு"

(குறள் —1122)

உதட்டிலென்னடி காயம் என்று தோழி கேட்கிறாள் நான் என்ன பதில் சொல்வது? என்றாள் தலைவி

இது ஒன்றும் பெரிய கேள்வியில்லை. ஒரு வீட்டையோ நிலத்தையோ உடைமையாக்கிக்

கொள்பவர்கள் அந்த நிலம் அல்லது வீடு தமக்கே சொந்தம் என்பதை நிலைநாட்ட ஆவணம் எழுதிப் பதிவு செய்து அதில் முத்திரை பதிக்கிறார்கள்.

வீடும் நிலமும் அழியும் பொருள்கள்; நீ என் னுயிரின் உடைமையாகிய அழியாப்பொருள். அழியும் பொருளையே ஆவணத்தில் பதிந்து முத்திரை யிட்டு வைத்துக் கொள்ளும்போது நீ எனக்கே உரியவள் என்பதைப் பதிவு செய்யவேண்டாமா? அதனால்தான உன்னிதழில் என்னிதழைப் பதிவு செய்தேன். அந்த முத்திரையின் அடையாளம் தான் உன்னுதட்டில் ஏற்பட்ட வடு என்றான் தலைவன்.

## 15. காதலன் எப்படி வெளியில் காணப்படுகின்றான்?

''முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோள் அவட்கு''(குறள் 1113

அவள் பேரழகி; மிகப்பேரழகி அவள் அழகைக் கண்டு சொக்கிப்போய்ச் சிலையாக நிற்கா தவர்களே இல்லை.

வானத்திலுள்ள நிலா அவள் வெளியில் வரும் நேரம் பார்த்து மேகத்திரைக்குப் பின்னால் போய ஒளிந்து கொள்ளும்.

அவள் குழந்தையாக இருந்த போதே நிலா அவள் அழகுக்குத் தோற்று விட்டது.

அவள் இப்பொழுது குமரியாகி விட்ட நிலையில் அவளைக் காணவே நிலா அஞ்சுகிறது.

அவள் சொல்லுக்குத் தோற்ற கிளிகள அவளைக் கண்டால் தலைகளை இலைகளைப்போல் நாணத்தால் தொங்க விட்டுக் கொள்கின்றன

அவள் பல்லுக்குத் தோற்ற முல்லை மலர், அவளைக் காணும் போது அதிர்ச்சியுற்று விரை வில் மலர்ந்து விரிந்து விடுகிறது.

அவள் கண்ணின் கடைப்பார்வையால் தாக்கப் பட்ட அவள் கணவனால் எப்படி எழுந்து வெளியில் வர முடிகிறது? அவன் வெளியில் காணப்படு கிறானே.

## 16. எனக்கொரு ஆசை.

"கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்
திருநுதற் இல்லை இடம்". (குறள்—1123)

ஏணியைச் செய்தவன் இரண்டு நெடுங்கழை களைக் குறுக்கு மிதிக்கட்டைகளால் நன்றாகப் பொருத்தி இணைத்து விட்டான்.

ஏணி இப்பொழுது ஒரே பொருள். அவை இரண்டு நெடுங் கழைகளாக யார் கண்ணிலாவது படுமா?

ஆணும் பெண்ணும் திருமணத்தால் இணைக் கப்படுகிறார்கள். அவர்கள் இருவரும் இணைந்து செல்லும்போது ஒரே உருவமாகக் காட்சிதர வேண்டும்.

இவர் கணவர்; இவர் மனைவி என்று பொது மக்கள் எங்களைப் பிரித்துப் பெயரிட்டுப் பேசு வதைக்கண்டால் எனக்கு வருத்தமாக இருக்கிறது. திருமணம் தான் எங்களிருவரையும் ஒருவராக இணைத்து விட்டதே. இது இவர்களுக்கெல்லாம் தெரியாதா? என்னடி மாந்தர் இவர்!

எனக்கு ஏதாவது மந்திர ஆற்றல் இருந்தால் என்ன செய்வேன் தெரியுமா? அதோ அந்தப் புதுப் பானையில் கொஞ்சம் தண்ணீர் ஊற்றிப்பார். புதுப் பானையின் ஓடு தன் மேல் பட்ட தண்ணீரை தனனுள் உறிஞ்சிக கொள்கிறது.

தண்ணீரையும் பானையையும் தனித்தனியாகக் காண முடியவில்லை.

இதைப் போலவே என் கணவர் என் அருகில் வரும் போது நான அவர் உடம்புக்குள் தண்ணீர் போல் உட்புகுந்து மந்திர ஆற்றலால் ஒன்றுகி விடவேண்டும். அப்போது என் கணவர் வடிவில் நானும் காணப்படுவேன் அல்லவா?

பார்ப்பவர் கண்ணுக்குக் கணவன் மனைவி என இரண்டு உருவங்கள் தெரியாதல்லவா?

## 17. இராகு எனும் பாம்பே! அந்நிலாவை நன்ருக விழுங்கு

"பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து" (குறள்—1229)

முழுநிலா நாள்; இருந்தாலும் அராக்கோளாம் (கிரகணமாம்) இன்று நிலவு கொஞ்ச நேரம் தெரியாதாம்.

தோழி இந்த நல்ல செய்தியை எனக்குச் சொன்னுள். தோழி வாழ்க! அந்தக் கிரகணம் வாழ்க

நிலா பொல்லாதது. அது பிரிந்தவரை வருத்துகிறது. பிறரை வருத்தும் நிலாவை அராக்கோள் (கிரகணம்) பிடிக்கட்டும்.

இராகு என்று ஒரு பாம்பு இருக்கிறதாம். அது தான் நிலாவை விழுங்குகிறதாம்.

ஏ! இராகு என்னும் பாம்பே. நீ நூருண்டு வாழ்க! அந்த நிலாவை முழுதும் விழுங்கிவிடுக. மெதுவாகச் செரித்து விடுக.

இனி நிலாவே வானத்தில் வேண்டாம் குளிர்ந்த போர்வையில் மறைந்துள்ள கொடியவர்கள், பலர் முன்னிலையில் உலவ வேண்டாம். இது என் நெடுநாள் ஆசை.

## 18. நெஞ்சும் செவியும்.

"கொடியார் கொடுமையின் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா". (குறள் – 1169)

தோழா! கார் காலத்தில் மனைவியைப் பிரிந்து வருந்துபவர்கள் அதற்கேற்ப தண்டனையை நுகர்ந்து விடுகிறார்கள்.

இரவுப் பொழுது அயர்ந்து உறங்குதற்கு ஏற்றது. உறக்கம் கெடின் உடல் நலம் கெடும்.

உண்ட உணவை வயிறு செரிக்க மறுத்தால் வயிற்றுவலி உயிரை வதைத்து எடுத்துவிடும்.

இரவில் கண்கள் உறங்க மறுத்தால் அந்த வேதனையை விவரித்துச் சொலலவே முடியாது.

என் கண்களில் அவள் இருக்கிறாள். என் கண்கள் அவளைக் கண்டால் தான உறங்கும். இல்லையேல் அவளைக் காணும் வரை அகலத் திறந்தே கிடக்கும்.

அவள் கண்களும் இப்படித்தானே அவளைத் துன்புறுத்தும்! ஆண்களின் கண்களில் துன்ப அலை கரைகடப்பதில்லை. பெண்மணிகளின் கண் களில் துயர அலை கரை கடந்து கண்ணீராறு களாகப் பெருகெடுத்து ஊருக்குள் பாயும். அந்த வெள்ளத்தில் அவள் மூழ்கி இறந்து விடுதலும் கூடும்.

என் கண்களுக்கு என் மனம் அறிவுரை சொல்லி யிருக்கலாம். ஆனால் மனமே அவளை நினைத்து விம்மிக் கொண்டிருக்கிறது. இதயம் துடிக்க மறுக்கிறது. வீட்டில் பெரியவர்களே அழுது கொண்டிருந்தால் பிள்ளைகள் அழாமல் என்ன செய்வார்கள்?

என் நெஞ்சின் விம்மல்களால் இதயம் உடைந்து விடும் போல் தெரிகிறது போதாதற்கு என் செவியின் வழியாக இடியோசைகளும் ஏன் இதயத்திற்குள் பாய வேண்டும்? அதிர்ச்சிமேல் அதிர்ச்சி ஏ! மேகங்களே! உங்களுககுக் கொஞ்ச மாவது ஈவு இரக்கமில்லையா?

## 19. கண்ணீர்க் கணைகள்.

**"பெயலாற்ரு நீருலந்த உண்கண் உபலாற்ரு**
**உய்வில்நோய் என்கண் நிறுத்து"** (குறள்-1174)

பொழுது விடிந்ததும் போருக்குப் புறப்படு வ்தாகச் சொன்னீர்கள். அந்தச சொற்களே என்னைப் பாதியாக இளைக்கச் செய்து விட்டன.

பொழுதும் விடிந்து விட்டது. புறப்பட்டும் விட்டீர்கள்.

நீங்கள் இரண்டடி எடுத்து வைப்பதற்குள் எத்தனைமுறை திரும்பிப் பார்க்கிறீர்கள. நான் வைத்த கண் வாங்காமல் உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

நீங்கள் என்னைத்தான் திரும்பிப் பார்க்கிறீர்கள். என் கண்களை ஏன் உற்று நோக்கவில்லை ?

நீங்கள் பிரிந்த ஒவ்வொரு நாளும் இரவுவரும், அந்த இரவுப் பொழுதில் நிலாவரும், நிலவு துன்பக் கடல்களைப் பொங்கிக் குமுறச் செய்யும். கடலலைகள் மோதி உருண்டு ஓலமிட்டு அழும். அதெல்லாம் எண்ணிப் பார்க்க உங்களுக்கு நேரமில்லை.

என்றாலும், உங்களை நான் பார்த்துக் கொண்டிருக்கும் போதே, நீங்கள் வாயிற்படியைக் கடப்பதற்குள் துயரப் பெருங்கடலை என் இருகண்களிலும் ஏன் தேக்கிவிட்டுப் போகிறீர்கள் ? நீங்கள் வரும்வரை துன்பக் கடலின் நீர் முழுவதையும் என் கண்கள் வடித்தாக வேண்டுமே.

பகைவன் மீது அம்பு செலுத்தப் போகும் நீங்கள் என் கண்ணில் ஏன் கண்ணீர்க் கணைகளை ஏவிவிட்டுப் போக வேண்டும் ?

## 20. கன்னத்தில் கையூன்றாதே

"பசந்தாள் இவளென்ப தல்லால் இவளைத்
துறந்தார் அவர்என்பார் இல்" (குறள்-1188)

நான் சொல்வது காதில் படவில்லையா ?

கன்னத்தில் கையூன்ற வேண்டாம். இந்தப் பெண்களே இப்படித்தான். ஒரு சிறு துயரம்

வந்தாலும் போதும். கன்னத்தில் கையூன்றி உட்கார்ந்து கொள்கிறார்கள்.

ஆண்கள் தலைக்குக் கைகொடுத்து உட்காரக் கூடாது

பெண்கள் கன்னத்தில் கையூன்றி உட்காரக் கூடாது.

துன்பம் வரும்போது சோர்ந்து விடாதே! துவண்டு விடாதே என்பதற்காகவும் பெரியோர்கள் இதைச் சொல்லியிருககலாம்

ஆனால், நான் உன்னை அறிவுறுத்திய காரணம் வேறு.

நீ பிரிந்த கணவனை எண்ணிக் கண்ணீர் சிந்துகிறாய். அப்போது கன்னத்திலூன்றிய உன் கைவளையல்கள் நனைகின்றன.

மீண்டும் நீ துயரம் தாளாமல் பெருமூச்சு விடுகிறாய்.

அப்போது, நீ யணிந்த வளையல்களின் மேல் வெப்ப மூச்சு படுகிறது.

அவை, கண்ணாடி வளையல்கள். குளிர்ச்சியும் வெப்பமும் மாறிமாறிப் பட்டால் உடைந்துவிடும்.

ஒரு மங்கல மகளின் வளையல்கள் உடையலாமா?

அதனுல்தான் கன்னத்தில் கையூன்ருதே என்று சொன்னேன்.

## 21. அழகின் குறைபாடுகள்

''பிணையேர் மடநோக்கும் நாணும உடையாட்கு
அணியெவனே ஏதில தந்து'. (குறள்—1089)

தோழி! நீயே பலமுறை சொல்லியிருக்கிருய். ஆண்களுக்குப் பருத்த தோள்கள் அழகை மிகுதிப் படுத்தும். பெண்களின் எடுப்பான மார்பகங்கள் தோற்றப் பொலிவால் கவர்ச்சிக் காந்தங்களாக விளங்கும் என்று.

நீ கூறும் உண்மைகளில் சில குறைபாடுகளும் உள்ளடங்கி உள்ளன.

பருத்த தோள்களை உடைய பெரு மறவர்கள் போர்த்தினவு கொண்டவராய் தம் மனைவியரைப் பிரிவுத் துன்பத்திலாழ்த்திவிட்டுப் , போருக்குப் போய்விடுகிருர்கள். அவர்கள் வீடுவந்து சேரும் வரை அம் மனைவிமார் படுந்துன்பத்தை யாரால் அளவிட்டுச் சொல்ல முடியும் ?

எடுப்பான பெரிய மார்பகங்களைக் கொண்டிருப்பதாலும் பெண்ணுக்கு இடர்ப்பாடுண்டு. ஆவலோடு வரும் காதலர் இதழைப்பருகக் காலக் கழிவு நேர்கிறது. அவர் என்னை முயன்று அணைக்க வேண்டியுள்ளது.

கைகள் குறித்த அளவு தான் நீண்டிருக்க வேண்டும். மிகக் குட்டையாக இருந்தால் மீன் சிறகு போல் தெரியும். பாதம் வரை கைகள் நீளுமானால் தோளில் தொங்கும் வால்களாகத் தெரியும்.

ஆதலால் காதலும் வீரமும் தம் வரம்பைக் கடக்கக் கூடாது.

காதலில் மூழ்கியவரும், வீரத்தின் மேல் வெறி பிடித்தவரும் வாழ்க்கையில் வெற்றி பெற மாட்டார்கள். அவர்கள் வாழ்வாங்கும் வாழ்ந்ததில்லை. இல்லறப்பயனை எள்ளளவும் நுகரத் தெரியாதவர்களாகவும் போய் விட்டார்கள். அழகைக் கவர்ச்சிப் பொருளாக்குவதில் என்னடி நன்மை ?

## 22. நான் வேண்டுவது ஒன்றே.

**"உரன் நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார்**
**வரல் நசைஇ இன்னும் உளேன்."** (குறள்-1263)

பலர் இறைவனை வேண்டும் போது பொன் வேண்டும், பொருள் வேண்டும், போரில் வலம் (வெற்றி) வேண்டும், பெருகும் நலம் வேண்டும் என்றெல்லாம் தம் தேவைகளை அடுக்கிக் கொண்டே போகிறார்கள்.

சிலர் கடவுளுக்கு ஆயிரம் பெயரைப்படைத்து அடுக்கி அடுக்கிப் புகழ்ந்து மட்டும் மகிழ்கிறார்கள் கண்கள் எதையும் கொடு என்று வேண்டுவதில்லை.

குழந்தையைப் புகழ்பவர்கள் குழந்தையிடம் என்ன எதிர்பார்க்கிறார்கள் ?

குழந்தை அறியாமையில் நனைந்த வெள்ளை மலர். கடவுள் தூய அறிவும் அளப்பறிய ஆற்றலும் உள்ளவர். கடவுளிடம் ஏதாவது கேட்டால் தவறில்லை.

கன்னிப் பெண் மலைமகளை (கவுரியை) வேண்டுகிறாள். அவள் வேண்டுவது ஒன்றே ஒன்று. அது தவிர அவளுக்கு வேறெதுவும் வேண்டவே வேண்டாம.

"கவுரியே ! அங்குசத்தை மீறிச் சினந்து வரும் மதயானைகளைப் புன் முறுவலோடு எதிர்க்கும மணாளனை எனக்கு இம்மையிலும மறுமையிலும் கொடு."

இந்த ஒரே வாக்கியத்தைப் பல்லாயிரம் முறை அவள் வாய் முணுமுணுத்துக் கொண்டிருக்கிறது.

## 23. கணவரிடம் இருபெரும் குறைபாடுகள்.

"கண்ணுள்ளிற் போகார் இமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர்". (குறள்—1126)

என் கணவரை எல்லாரும் பாராட்டிக் கொண்டே இருக்கிறார்கள். அவரிடம் உள்ள சிறந்த பண்புகளுக்காகவும் அருந்திறனுக்காகவும்

அருளுள்ளத்திற்காகவும் கொடைத் தன்மைக்காக வும் இப்படிப் பல காரணங்களை முன்னிட்டுப் புகழ்கிறார்கள். அவர் நற்பண்புகளை என்றாலும் எண்ணிச் சொல்லமுடியாது. ஏனெனில் கொள் ளைக்காரனிடமும் கடத்தல்காரனிடமும் கள்ளப் பணம் குவிவது போல் அவரிடம் கணக்கிறந்த நற்பண்புகள் மறைவாகக் குவிந்துள்ளன

அவருடைய நற்பணபுகளை வாயப்பு நேர்ந் தால் ஒழிய ஒரு சேர முழுமையாகக் காண முடிவ தில்லை.

என் கணவர் ஒருநாள் என்னைப் பார்த்துக் கேட்டார். "எல்லாரும் என்னைப் புகழ்கிறார்கள். அவர்கள் நெருங்கிப் பழகாதவர்கள். நெருங்கிப் பழகியவர்களின் கண்களுக்குத் தான் என்னிடம் உள்ள குறைபாடுகள் தெரியும் இயலாமைகள் (Weakness) புரியும். உனக்குத் தெரிந்த என் குறை பாடுகளைச் சொல்லேன்'' என்கிறார்.

எனக்கா அவரிடம் உள்ள குறைபாடுகள் தெரியாது? நெடுநாள்களுக்கு முன்பே இரண்டு குறைபாடுகளைக் கண்டுபிடித்து வைத்திருந்தேன். தயங்காமல் சொல்லத் தொடங்கினேன்.

உங்கள் வீரத்தில் ஒரே ஒரு குறைபாடு உண்டு. நீங்கள் போர்க்களத்தில் போரிட்டு முடிக் கும் நேரத்தில் உங்கள் வாள் ஒன்று தான் எஞ்சி நிற்கிறது.

உங்கள் கொடைத்தன்மையிலும் ஒரு குறை பாடு இருக்கிறது. உங்கள் வள்ளல் உள்ளம் வந்தவர்க்கெல்லாம் செல்வத்தை வாரிக் கொடுத்து முடியும்போது நான் மட்டும் தான் உங்களருகில் எஞ்சி நிற்கிறேன்.

## 24. இரண்டும் தீதே.

"காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல்." (குறள்—*1164*)

ஒளி வெள்ளத்தை வாரி இறைத்துக்கொண்டு கதிரவன் காலையில் தோன்றியபோது மகிழ்ச்சியாக இருந்தது. வெயில் ஏற ஏற வெப்பம் மிகுந்தது. தலைவனைப் பிரிந்த என்னைப் பலரும் பார்த்து ஆறுதல் சொல்லி வருந்தும் போதும் என் பிரிவுத் துயரம் மிகுந்தது.

இளங்கதிரவன் அனல் கக்கும் கடுங்கதிரவனாகி விட்டான்.

தொடக்கத்தில் சிலர் நல்லவர்களாகத் தெரிகிறார்கள்.

அனல்வீசும் கதிரவனை நான் விரும்பவில்லை. அந்தி நேரத்தையும் நான் விரும்பவில்லை.

பறவைகள் ஆணும் பெண்ணுமாய் வீடு திரும்புகின்றன. நான் என் தலைவனைப் பிரிந்திருக்

கிறேன். மாலைப் பொழுது என் மனத்தை வருத்துகிறது.

இரவை வரவேற்றேன்.

நான் இரவைத் தான் வரவேற்றேன். இந்த நிலவை யார் வரச்சொன்னது.

நாம் நமக்கினிய ஒருவரை எதிர்நோக்கி அவ ளோடு உட்கார்ந்திருககும் போது வேறு வேண்டா தவர் யாராவது அவருடன் வந்து விடுகிறுர்கள், நமக்கு வேண்டப்பட்டவரை அரிதாக எதிர்ப் பட்டும் என்ன பயன்? சந்திப்பின் நோக்கமே சிதறிப் போகிறது.

வானத்தில் ஒரு வெண்ணிலவாம். ஒரு சூரிய னும். இவர்களால் ஒரு பெண்ணின் மனமறிந்து நடந்து கொள்ளத் தெரிகிறதா? இரவே! பகலே! இயற்கையே! ஏன் என்னை வாட்டுகிறீர்கள்.

இரவு நன்றன்று. பகலாற்பயனில்லை. இரண்டும் தீதே.

## 25. நான் உங்களுக்காக நீங்கள் யாருக்காக!

**"காதல் அவரில ராகநீ நோவது**
**பேதைமை வாழியென் நெஞ்சு".** *(குறள்—1242)*

அன்புள்ள காதலரே!

நான் உங்களுக்காகவே என்பது நான் சொல்லி உங்களுக்குத் தெரிய வேண்டியதில்லை

நீங்கள் என்னை மணந்து கொண்ட அந்த நிமிடத்திலிருந்து நீங்கள் எனக்காக மட்டும் என்பது உலகறிந்த உண்மையாகி விட்டது.

சில நேரங்களில் பெரிய உண்மைகள் கூட சோதனைக்குரியவை ஆகிவிடுகின்றன

வெற்றிலைக் கொடி அகத்திக் கொம்பைத் தழுவி பின்னிப் பிணைந்து கொள்கிறது.

அகத்திக்கொம்பு இப்பொழுது எத்தனை அழகாகத் தெரிகிறது.

அகத்திக் கொம்பு ஒரே கொடியைத் தான் தழுவிக் கொள்கிறது.

பல கொடிகளைத தழுவிக் கொண்டால் அது புதராகி விடும்; கொம்பும் முறிந்து விடும்.

ஒரு ஆடவன் ஒரே பெண்ணைத்தான் மணந்து கொள்ள வேண்டும்.

நான் உங்கள் முகத்தைக் காண ஏங்கிக் கொண்டிருக்கிறேன்.

நீங்கள் வேறொருத்தியின் முகம் காண ஏங்கிக் கொண்டிருக்கிறீர்கள்.

இயற்கைக்கு முரணாக உலகில் வேறு எங்காவது இந்தக் கோமாளிக் கூத்து நடக்குமா ?

குழந்தை ஆசையோடு பெற்ற தாயின் முகம் நோக்குகிறது.

தாயும் பாசத்தோடு குழந்தை முகம் பார்க்காமல் வேறு ஒரு குரங்கின் முகத்தைப் பார்க்கலாமா?

அப்படிப் பார்த்தால் அவள் தாயா?.

வேறொருத்தியை விரும்பும் கணவன் மாந்தப் பிறவியா ?

## 26. பிரிவும் சாவும்.

**"உள்ளம் போன்றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்**
**நீந்தல மன்னோஎன் கண்."** *(குறள்—1170)*

பிரிவுத்துன்பம் என்று ஒன்று இருக்கிறது. அது பிரிந்தவரை விட பிரியப்பட்டவரை அதிகமாகத் துன்புறுத்துகிறது; சாகவும செய்து விடுகிறது.

ஏன் தெரியுமா ?

பிரிபவர் ஆணாயினும் பெண்ணாயினும் ஒரு காரணத்திற்காக அல்லது கடமையின் பொருட்டுப் பிரிகின்றனர். தாம் பிரிந்து செல்லக் காரணமான கடமை அல்லது வேலையிலீடுபட வேண்டியிருத்தலால் பிரிவுத்துன்பம் அவர்களை அதிகமாகச் சுட்டெரிப்பதில்லை.

பிரிவுக்குள்ளாகி நிற்கிறாளே தலைவி. இவளை அப்பிரிவுத் துன்பம் கொஞ்சம் கொஞ்சமாக மென்று கடைசியில் தின்றே விடுகிறது.

தலைவி சொன்னாள்.

உங்களைப் பிரிந்தால் அது எனக்குச் சாவு; என்னைப் பிரிந்தால் அது உங்களுக்குச் சாவு. அன்றிற் (சாரசப்) பறவைகளில் எது பிரிவுக குள்ளாகிறதோ அது முதலில் இறந்து விடுகிறது.

ஆதலால் இருவரும் செய்யத் தக்கதாக அந்தக் கடமை அல்லது தொழில் காரணமாகப் பிரியும் பிரிவு அமையக் கூடாதா, என்கிறாள்.

சிட்டுக் குருவிகள் இணைந்தே இரை தேடு வதற்காகப் பறந்து செல்கின்றன. ஆணும் பெண் ணும் மட்டும் ஏன் எங்குச் சென்றாலும் இணைந்தே செல்லக்கூடாது? பிரிவு என்ற ஒன்றைச் செயற்கை யாக உண்டாக்கிக் கொள்கிறார்கள்? பெண், வீட்டின் சமையல் கட்டுக்குக் காவலிருந்தே ஆக வேண்டுமா ?

## 27. யான் பெற்ற இன்பம் வையகம் பெறுக.

**"எள்ளின் இளிவாம் என்றெண்ணி அவர்திறம்**
**உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு."** (குறள்—1298)

"தோழி ! எனக்கு ஒரே ஒரு ஆசை" என்றாள் தலைவி.

உங்கள் ஆசைகள் அனைத்தும் நிறைவேறி விட்டனவே; இன்னும் என்ன ஆசை? ஆசைகூட உங்களைப் போல் குழந்தை பெற்றிருக்கிறதா? என்று தோழி வேடிக்கை விறைவைத் தீபாவளி பட்டாசு போல் கொளுத்திவிட்டு மத்தாப்புப் போல சிரித்தாள்.

தலைவி சொன்னாள்

மற்ற பெண்களைப் போல எனக்குத்திருமணம் நடக்க வேண்டும் என்று நினைத்தேன்; நடந்தது. மற்றவர்களைப் போலவே அழகிய இல்லறமும் நல்லறத தலைவனும் அமைய வேண்டும் என்று கடவுளை வேண்டினேன் அதுவும் நடந்தது முல்லைச் சிரிப்பால் உள்ளங்கவரும் பிள்ளை வேண்டும் என நினைததிருந்தேன்; அதுவும் கிட்டியது.

இதுவரை மற்றவர்களைப் போல நான் வாழ வேண்டும் என்று நினைத்திருந்தேன். அது எவ்வளவு தவறு என்று இபபோது தெரிகிறது. ஏனென்றால் இப்போது மற்றவர்களின் குடும்பங்களைவிட எங்கள குடுமபமே எல்லா வகைகளிலும் அன்பிலும் அறத்திலும் அருளிலும் பல்லாற்றலும மேம்பட்டு நிற்கிறது. இதற்கெல்லாம் காரணம் மிகுந்த அன்பும் ஆற்றலும் உள்ள என் கணவர் தான்.

ஆதலால் இப்பொழுது எனக்குள்ளே ஒரே ஆசை, உலகத்திலுள்ள எல்லா குடும்பத் தலைவர்

களான ஆண்களும் என் கணவரிடம் வந்து அன்பும் அறிவும் சால்பும் திறனும் கற்றுக்கொள்ள வேண்டும் என்பதே.

## 28. சொல்வலை வேட்டுவன்.

"பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை." (குறள்—1258)

தோழி ! அவருக்குப் பேசத் தெரியாது என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய் ' எத்தகைய வழக்கறிஞரும் அவரிடம் தோற்றுவிடுவர். தருக்கத்தில் வல்லவா கூட அவர் சொல்லாற்றலை வியப்பர்.

ஒரு நாள் என்னைப்பார்த்து 'நீ என்னுள்ளத்தில் நிலையாகக் குடி புகுந்து விட்டாய்' என்றார். மறுநாள் 'என்னை நீ உன்னுள்ளத்தில் சிறைப் படுத்திக் கொண்டாய்' என்றார். எனக்குச் சிரிப்பு வந்து விட்டது.

ஏன சிரிக்கிறாய என்றார்.

நேற்றே நான் உங்கள் உள்ளத்திற்குள் இருப்பதாகச் சொன்னீர்கள் உங்கள் வாய்மொழி உண்மையானால் என்னை வெளியில் எப்படி உங்களால் காண முடிந்தது? இதே ஒரு பொருந்தாக் கூற்று. இது போதாதென்று இன்று நீங்கள் என்னுள்ளத்தில் சிறைப்பட்டிருப்பதாகக் கூறுகிறீர்கள். நான் உங்கள் உள்ளத்தில் ஏற்கெனவே சிறைப்பட்டிருக்கும் போது நீங்கள் எப்படி என்னுள்ளத்திற்குள் வரமுடியும்?

இருவரும் ஒருவரை ஒருவர் விழுங்கிக் கொள்ள முடியுமா? என்றேன்.

முடியுமே. மீன்கள் ஒன்றையொன்று விழுங்கிக் கொளவது உனக்குத் தெரியாதா? என்ருர்.

மீன்கள் ஒன்றையொன்று விழுங்கிஞல் செத்துப் போகும்; நாம் உயிரேடிருக்கிறேம் என்றேன். வியப்படி தோழி! இந்தக் கேள்விக்குக கூட அவர் விடை சொல்லி விட்டார்.

கேளடி, மரத்தில் பழம் இருக்கிறது. பழத்தின் விதையுள்ளும் ஒரு மரம் இருக்கிறது. அந்த வளரப் போகும மரத்திலும் காய்க்கப்போகும் பிஞ்சு இருக்கிறது தெரியுமா என்ருர். ஒன்றினுள் ஒன்று இருப்பது வளர்ச்சிக்கு அடையாளம். சொல் வலே வேடர் அவர். அவரிடம் பேசி வெல்ல முடியுமா ?

## 29. மரமும் இலேகளும்.

**''நன்னீரை வாழி யனிச்சமே நின்னினும்**
**மென்னீரள் யாம்வீழ் பவள்.''** (குறள் —*1111*)

வித்து முளேத்து இளஞ்செடியாக இருந்த போது இலேகள் மிகமிக அருகில் இருந்தன. எங்கள் காதல் அரும்பி இல்லற வாழ்வாக மலர்ந்த போது இதழோடு இதழ் ஒட்டிய தாமரை போல் இணேந்தே இருந்தோம்.

இந்தச் செடி மரமாக வளர்ந்த பிறகு பரவலாகப் பிரிந்த பல்வேறு கிளேகளால் ஏந்தப்பட்டு இலேகள் வெகு தொலேவில் சென்று விட்டன.

குடும்பம் வளர்ந்தது; குழந்தைகள் பெரியவர் களானார்கள். என் கணவர் பல்வேறு கடமைகளில் மூழ்கி வீட்டிற்கே வருவதில்லை. எப்போழுதோ வருகிறார். அவரைக் காணாமலிருப்பது பெருந் துன்பமாயிருக்கிறது.

அருகிலிருந்து நிழலளித்த இலை பிரிந்து தொலைவாகப் போய்விட்டது. உச்சாணிக் கிளையி லிருந்தும் அந்த இலை அடிமரத்துக்கு நிழல ளித்துக கொணடுதான் இருக்கிறது. என் கணவர் எங்கிருந்தாலும் என் நினைவுக்கு இனிமையூட்டிக் கொண்டுதானிருக்கிறார்

எந்த இலை பழுத்தாலும் உச்சாணிக் கிளையில் தளிரிலையே எப்பொழுதும் காணப்படுகிறது. அடிமரம் பசுமையாக இருக்கும் வரை உச்சாணிக் கிளையில் பச்சைத் தளிர்களே இருக்கும். நான் உயிரோடு இருக்கும் வரை என் கணவர் பொலிவு குன்றாமல் இருப்பார்.

நான் இல்லத்தரசியாக வேரூன்றிச் செழிக்க அவர்தானே காரணம் மற்றவர் எங்களைப் பார்த் துப் பசுமையான குடும்பம் என்று சொல்லும்போது எத்தனை பெருமையாக இருக்கிறது தெரியுமா? நான் அவரை நிமிர்ந்து பார்க்கிறேன். அவர் என்னைக் குனிந்து பார்த்து முறுவலிக்கிறார். அவர் பார்வையில் கனிவு பழுத்திருக்கிறது.

## 30. கண்கள்.

'காணிற் குவளை கவிழ்ந்து நிலன் நோக்கும்
மாணிழை கண்ணொவ்வேம் என்று'' (குறள்-1114)

தோழி! என கண்களுக்கு ஏன் மையெழுது கிறேன் தெரியுமா! அவை எனக்கு ஞான ஒளி காட்டும் தெய்வம். தெய்வத்திற்கு ஒப்பனை செய் வது போல என் மலர்விழிகளை அழகு படுத்து கிறேன். நான் மகிழும்போது அவை ஒளி விடு கின்றன. நான் துயருறும் போது எனக்காகக் கண்ணீர் வடித்து என் துன்பத்தை அளவிட்டுக் காட்டுகின்றன. அது மட்டுமா? உள்ளம் வெறுக்கத் தக்கது காணுமுன் மூடிக்கொள்கின்றன உள்ள மும் உயிரும் சேர்ந்து அவர்வும் என தலைவனைக காணும் போதெல்லாம் அகல விரிகின்றன. அவரை முதன் முதல் கண்டபோதும் என் கண்கள் இவ் வாறு தான் மலர்ந்தன. எனக்கேற்ற தலைவர் இவர் தான் என்று முதல் சந்திப்பிலேயே என் கண் களுக்கு எப்படித் தெரியும்? முற் பிறப்பிலேயோ கண்டு பழகிய நினைவோ?

## 31. மேன் மேலும் வினவாதே.

''வீழ்வாரின் இன்சொல் பெருஅது உலகத்து
வாழ்வாரின் வன்கணூர் இல்.'' (குறள்—1198)

தோழி! நீ என்னிடம் மிகுந்த அன்புடைய வள் என்று எனக்குத் தெரியும். தலைவன் பிரிந்த

துயரால் துவண்டுபோன என் உள்ளம் நைந்து போன துணியாகக் கிடக்கிறது. அதைத் தொடாதே; கிழிந்து போய்விடும்.

என் துன்பத்திற்குத் துணையாக வேண்டுமாயின், அருகிருந்து ஆசையாகப் பார்த்தால் போதும். தலைவரைப் பற்றி எதுவும் பேசாதே. அவருடைய ஆசை வறண்டு விட்டதா என்றெல்லாம் கேட்காதே. அச்சொற்கள் என் உள்ளத்தில் சம்மட்டி அடியாக விழும்; அதை நான் எப்படித் தாங்கிக் கொள்வேன். அப்படி வினவுவது நீ எனக்கு நன்மை செய்வதாகுமா?

கடலிடை ஊழித்தீ (வடவைத்தீ) தோன்றியது என்றாலே போதும்; கடல் வற்றி விட்டதா என்ற வினா தேவையில்லை.

## 32. வானம் இடிகிறது.

"அரிதாற்றி அல்லல் நோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்". (குறள்—1160)

கார் மேகங்களிடையில் தோன்றிய பொன் மின்னல் மறைந்தது. இடிகளின் அதிர்ச்சி மட்டும் இன்னும் நீடிக்கிறது ஏ இடியே! பிரிந்தவர்கள் கூடவேண்டும் என்பதற்காக வானத்து வெடிகுண்டாய், வைகறைப் பொழுதின் விளி சங்காய் நீ உறுமுகிறாய்.

நான் பிரிந்த தலைவியை மீண்டும் எப்போது காணப்போகிறேன். அவள் என் பிரிவாற்றாமல்

இதற்குள் இறந்திருப்பாள். இன்னும் உயிரோடு இருப்பாளாயின் அவள் என் மீது உண்மையான பேரன்பு கொண்டவளல்லள். நான் குறித்த நாள் களுக்குள் அவளைச் சென்று காணுததால், எவ் வகையிலும் நான் அவளை இழந்தவனே ! அப்படி யிருக்க என்னை நோக்கி வீணுக ஏன் இடிக்கிருய் ! உன் உரப்பல் பேரோசை சாவுமணி யோசையாகத் தான் எனக்குக் கேட்கிறது.

## 33. வண்டு விம்முகிறது.

"வாழ்வார்க்கு வானம் பயந்தற்ருல் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி." (குறள்—1192)

தோழா ! இந்த வண்டு முரல்வது வேறு விதமாக இருக்கிறது. முரல்கிறது என்று சொல் வதைவிட விம்மி விம்மியழுகிறது என்று சொல்ல லாம். தான் தேனுண்ட மாதவி மலரைப் பிரிந்து நெடுந்தொலைவு சென்று இன்றுதான் இந்த வண்டு திரும்பி வந்தது. பிரிவாற்ருத மாதவி மலர் வாடி உதிரத் தொடங்கி விட்டது. இக்காட்சி வண்டின் உள்ளத்தை உருக்கி விட்டது. வண்டு அழாமல் என்ன செய்யும்?

## 34. நாணினேன் தோழி.

"பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்." (குறள்—1234)

ஏனடி தோழி! அந்த வியத்தகு நிகழ்ச்சியை நினைக்க நினைக்க எனக்கு மேலும் வியப்பாக இருக்கிறது. ஒரு பெண்ணுக்குப் பூவும் பொட்டும் எத்துணை இன்றியமையாதனவோ அத்துணை இன்றியமையாதவை வளையல்கள். மங்கல மகளின் சாயலுக்கு அவை எழிலூட்டுபவை. வளை குலுங்க நடப்பதில் எனக்கு எவ்வளவு பெருமை தெரியுமா. நான் உண்ணுமலிருப்பேன் உறங்காமலும் இருப்பேன். ஆனால் கைகளில் வளையல் இல்லாமல் ஒரு நொடியும் இருக்கமாட்டேன். இது உனக்குத் தெரிந்தது தானே.

ஆனால் அன்று என் வளையல்கள் என்னை ஏமாற்றி விட்டன. அவர் என்னை ஏமாற்றுவது போதாதென்று என் வளையல்களுமா என்னைச் சோதிக்க வேண்டும். அன்று அவர் முன்னால் என் வளையல் இல்லாத கைகளை மறைத்துக் கொள்ள முடியாமல் என்ன பாடுபட வேண்டி வந்தது ? அப்பப்ப ! இனி யாருக்கும் அந்நிலை ஏற்படவேண்டாம். நான் அப்படி நேரும் என்று கனவிலும கருதவில்லை

காதலர் வருவார் வருவார் என்று எதிர் பார்த்துச் சலித்துப்போய் உட்கார்ந்திருந்தேன். நம் வீட்டு முற்றத்து வேப்பமரத்தில் காக்கைகள் கரைந்தன. உண்மையாகவே காதலர் வந்து விடுவார் என ஆசை வெள்ளத்தைக் கண்களில் தேக்கிப் பார்வை அலைபாய பதுமை பாக உட்கார்ந் திருந்தேன். அவர் வரவே இல்லை. வெறுத்துப்

போய்விட்டது. வீட்டுக்குள் போய் அறைக் கதவைப் பூட்டித் தாழிட்டு முள்ளாய் மாறிய படுக்கையில் முனகயுடையாத செங்குமுதம் போல் மனங்கூம்பிப் போய் சோம்பிக் கிடந்தேன். அந்தப் பாழுங் காக்கைகள் மீண்டும் கரைந்தன. எழுந்து போய் கதவைத் திறந்து கால் நோகும் வரை நின்றிருந்தேன் அவர் வரவே இல்லை. கதவைப் படார் என்று மூடி விட்டு வந்து கட்டிலில் பொத்தென்று வீழ்ந்தேன். என்னுடல் மெலிந்தே போய்விட்டது.

அந்தக் காக்கைகளுக்கு எத்தனைக் குறும்பு? மீண்டும் கரைந்தன. எனக்குச் சினம் பொத்துக் கொண்டு வந்தது. அனைத்துக் காக்கைகளையும் காலொடித்து விட நினைத்து ஐந்தாறு கற்களை வேக வேகமாகப் பொறுக்கினேன். வலிமை கொண்டமட்டும் காக்கைகளை நோக்கி வீசினேன். நான் கல்வீசிய வேகத்தில் சில வளையல்களும் கழன்று காக்கைகளைத் தாக்க சக்கரப் படைகளாகப் பாய்ந்து சென்று விட்டன காக்கைகள் பறந்ததும் என் கண்கள் வியப்பால் அகலத் திறந்தன. திறந்த கண்களை என்னால் இமைக்கவே முடியவில்லை. என்ன வியப்பு! என் காதலர் என் வீட்டு வாசலில் எதிரில் வந்து கொண்டிருந்தார்.

என் உடம்பு மகிழ்ச்சியால் பூரித்துப் போய் விட்டது. முன் கையோடு ஒட்டி நின்ற வளையல்கள் தாமாக உடைந்து தெறித்து விழுந்து

விட்டன. இரண்டு கைகளிலும் ஒரு வளையல் கூட இல்லை. ஆசையோடு வரும் காதலரை வளைய லில்லாத கைகளோடு எப்படி வரவேற்பது என்று தெரியாமல் திண்டாடித் திணறிப் போனேன். அளவிட முடியாத நாணம் என்னை எத்தனையோ கோணல்களாக முறுக்கி வளைத்து விட்டது. அவருக்கு இதையெல்லாம் நான் எப்படிச் சொல்வது ?



## 35. மரத்தின் பயன்.

"அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லாதவர்" (குறள்—997)

மரத்தின் மீதேறி அதன் கிளைகளை மிதிக்கிறார்கள்; இலைகளைப் பறிக்கிறார்கள்; பழங்களை உதிர்க்கிறார்கள்; கிளைகளையும் ஒடிக்கிறார்கள் இத்தனையும் பொறுத்துக் கொண்டு மரம் அவர்களுக்கு நிழலும் பழமும் கொடுத்துக் கொண்டுதானிருக்கிறது தன் துன்பங்களை அது எவரிடமும் சொல்வதில்லை.

எத்தனையோ பறவைகள் வந்து அம் மரத்தில் தங்குகின்றன. அவற்றின் பாட்டைக் கேட்டு மரம தலையசைக்கிறது. பழங்களைப் பரிசளிக்கிறது

பச்சை மரம் பட்டுப் போய்விட்ட பிறகுகூட விறகாகப் பயன்படுகிறது.

மாந்தனே நீ வாழும் போது யாருக்காவது நன்மை செய்திருக்கிறாயா ?

உனக்குத் தீமை செய்தவர்களுக்கும் உன்னைத் துன்புறுத்துவதையே தொழிலாகக் கொண்டவர்களுக்கும் கூட நன்மை செய்திருக்கிறாயா ? இல்லையென்றால் மரத்தைவிட இழிந்தவன் நீ.

மரம் இருந்தும் பயன்படுகிறது; இறந்தும் பயன்படுகிறது.

மார்ந்தணுகிய நீ இருந்தும் பயன்படவில்லை; இறந்தும் பயன்படப் போவதில்லை.

## 36. இவனன்றோ வீரன்!

**"சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து."** (குறள்—777)

பெருவீரனொருவனைக் காணோம். போரில் தான் நம்படை வென்று விட்டதே! வெற்றிவிழா வில் சிறந்த போர் வீரர்களுக்குப் பரிசு தரும் வேளையில் அந்த வீரன் எங்கே போய் ஒளிந்து கொண்டான்?

'தேடுங்கள் அவனை' என்று அரசன் கட்டளை யிட்டான்.

அப்போர் வீரன் மனைவி போர்க்களத்தில் அவ் வீரனின் பிணத்தருகில் தன்னைத் தானே மாய்த்துக் கொண்டு பிணமாகிக் கிடந்தாள்.

அப்போர்வீரன் எத்தனையோ களிறுகளைக் கொன்றவன். மதயானையின் மத்தகத்தைப் பிளந்தவன்.

இத்துணை வலிமை சான்றவனின் உடல் முழுதும் வெட்டுப் பட்டுள்ளது. நெஞ்சில் ஈட்டி பாய்ந்துள்ளது. பல்லைக் கடித்த சினத் தோற்றம் அவன் முகத்தில் சிறிதும் மாறவில்லை.

அவன் வலதுகை உறையிலிருந்த உடைவாளை இறுகப் பற்றிய பிடி பிணமாகிய பின்னும் தளர

வில்லை. தளராத அக்கைப்பிடியைக் காண அரசனே களிறேறி வந்தான்.

அப்பெரு மறவனுக்குத் தன் கண்ணீர் காணிக் கையைச் செலுத்தினான்.

## 37. மாந்தரின் இயல்பு.

**"சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க**
**சொல்லிற் பயனிலாச் சொல்."** (குறள்—200)

யானைத் தன் பாகனையே கொன்று விட்டது. கொல்லுவது யானையின் இயல்பு. நாய்கள் ஏன் இப்படிக் குலைக்கின்றன? குலைத்துக் கொண்டே இருப்பது நாயின் இயல்பு

அருவிகள் சலசலக்கின்றன; அது அருவியின் இயல்பு. மாந்தர்கள் பேசிக்கொண்டே இருக் கிறார்கள்; பேசிக்கொண்டே இருப்பது மாந்தரின் இயல்பு.

சில நேரத்தில் இயல்பான குணங்களால் இடர்ப்பாடுகள் நேரும். அதனை அறிந்து தம் இயல்பை மாற்றிக் கொள்ள வேண்டும்.

யானையும் நாயும் தம் இயல்புகளை மாற்றிக் கொள்ள முடியாதவை.

மாந்தன் நினைத்தால் வெறும் பேச்சு பேசு வதை நிறுத்திக் கொள்ளலாம். பயனுள்ளவற்றை மட்டும் பேசலாம். அன்பும் அறமும் சார்ந்த

சொற்களை மட்டும் இனிமை கலந்து பேசி அனை வரையும் இன்புறுத்தலாம்.

குயில் தன் குரலால் இன்புறுத்துகிறது. மாந்தன் தன் இன் சொல்லால் அனைவரையும் இன்புறுத்தலாம், மாந்தன் இதைச் செய்வானா ?

## 38. பகைப்பாராட்டிப் பெறுவதென்ன

**"இகலென்னும் இன்னாத ஒன்றை ஒருவன்**
**நகலையும் வேண்டற்பாற் றன்று."** (குறள் – 853)

அரசே! நாள்தோறும் பகைவனைப் பற்றியே பேசுகிறீர்கள். உங்கள் உள்ளத்தில் சினத் தீ புகைந்து கொண்டே இருக்கிறது. நீங்கள் சினந்து காணப்படும் நிலையைக் கேட்ட பகைவரெல்லாம் மேலும சினம் கொள்கிறார்கள். நெருப்பு நெருப்பை வளர்க்கிறது. பகை பகையை வளர்க்கிறது. போர்கள போர்களை வளர்ககின்றன.

பகைவரின் எண்ணிக்கையை பெருக்கிக் கொண்டே போனால் நமக்குப் பகைவர் மிகுதியாக வும் நண்பர் குறைவாகவும் போய்விடுவார்கள்.

அப்போது நாம் சிறுபான்மையராவோம். பகைவர் சேர்ந்தெதிர்த்தால், நம் வீழ்ச்சியை நாம் தடுத்துக்கொள்ள முடியாது. எங்கோ இருக் கின்றவர்களுக்கு 'பகைவர்' என்ற பட்டத்தை ஏன் சூட்டவேண்டும்?

வானத்திலுள்ள மேகங்களெல்லாம் உங்கள் பகைவர் என வைத்துக் கொள்ளுங்கள். வானளாவி

அவற்றை வாளால் வீசிக் கொல்ல உங்களால் முடியுமா? உங்களுக்கிருப்பது இரண்டு கைகள்; குறிப்பிட்ட அளவு வாழ்நாள் சாவு எந்த நேரத்திலும் ஒருவனைத் தழுவக்கூடும். இறப்பு வருவதற்குள் உங்களால் எத்தனைப் பகைவரை வீழ்த்த முடியும்? எந்த ஓர செயலைச் செய்து முடிக்க முடியும்?

## 39. நாக்கு தலைமைப் பொறி.

**"யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்**
**சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு."** குறள்-125)

மெய், வாய், கண், மூக்கு. செவி எனும் ஐந்து புலன்களுள் தலைமையானது எது என்று பலர் சிந்திப்பதே இல்லை.

மெய், கண், மூக்கு, செவி ஆகிய நான்கையும் தவறகப் பயன்படுத்துவதால் ஏற்படும் தீங்குகளை விட வாயை அதாவது நாவைத தவறுகப் பயன் படுத்துவதால் ஏற்படும் தீங்குகள் எண்ணிறந் தவை,

நாக்கு மட்டும் நல்லனவற்றைப் பேசும் திறனைப் பெற்று விட்டால், கண் நல்லதையே காணும. காது நல்லதையே கேட்க அவாவும. மூக்கும் மெய்யும் நல்லன நுகரும்.

ஐம்பொறிகளுககும் தலைமையான நாவை அடக்குக. அதன் நிழலில் தான் ஏனைய பொறிகள் செழிக்கவேண்டும்.

பூசணிக் கொடியின் வேரைப் பறித்து விட்டால் எல்லா இலைகளும் வாடிவிடும். நாவடக்க மில்லாவிடில் எல்லாப் புலன்களும் கெட்டுவிடும்.

நாவசைந்தால் நாடசையும் சிறப்பு நல்லன பேசும் இயல்புக்குக் கிடைத்த பரிசல்லவா? தலைமைப் பதவியில் இருப்பவர்க்கு நல்ல பயிற் சியை முன் கூட்டியே தருக. இளமையிலேயே நாவை நல்வழிப்படுத்துக.

## 40. சம்மட்டி அடி.

**"இடுக்கண் வருங்கால் நகுக அதனை**
**அடுத்தூர்வ தஃதொப்ப தில்".** (குறள்—621)

துன்பத்தைக் கண்டு ஏன் துடிக்கிறாய்? அஞ்சி யஞ்சி ஏன் அலமருகிறாய்? துன்பம் உன்னை என்ன செய்துவிடும். துன்பத்தைக்கண்டு ஏன் வெருண்டு ஓடுகிறாய்? நீ ஓடுவதால்தான் அது உன்னைத் துரத்துகிறது.

கல்லைப்போல் எதிர்த்து நில்; இதயத்தை இரும் பாக்கிக்கொள்; துன்பங்கள் அடுத்தடுத்து சம்மட்டி அடியாக உன்மேல் விழட்டும்; அந்தச் சம்மட்டி அடிகளை அமைதியாகத் தாங்கிக்கொள். சம்மட்டி அடிகள் வேகமாகத்தான் விழும்; அதனால் தீங்கில்லை.

சம்மட்டி அடிகள் தன்னைத் தாங்கிக்கொள்ளும் இரும்புக்கு ஒரு புது வடிவத்தைத்தரும்; வேறொன் றும் செய்துவிடாது.

சம்மட்டி அடிகளைத் தாங்கிக்கொள்ளும் இரும்பின் எடை சிறிதும் குறையாது; இரும்பின் குணமும் மாறிப் போய்விடாது.

உனக்கு வரும் துன்பங்களை அமைதியாகத் தாங்கிக கொண்டால் வருங்கால வாழ்வில் பயன் படத்தக்க வடிவத்தை நீ பெறுவாய்.

## 41. இனி அமைதியுறுக.

**"அல்லல் அருளாள்வார்க் கில்லை வளிவழங்கு**
**மல்லல்மா ஞாலங் கரி."** (குறள்—245

மான்களே! மருண்டு மருண்டு பார்க்காதீர்கள். உங்கள் மருட்சியின் காரணம் அறிவேன். புதரில் பதுங்கியிருந்து பாய்கின்ற புலியையும், ஒரே பாய்ச்சலில் உயிரைக்குடிக்கும் அரிமாவையும் நினைத்துதான் மருண்டு பார்க்கிறீர்கள். அஞ்ச வேண்டாம். அந்தக் கொடு விலங்குகள் இங்கே இப்போது இல்லை.

எந்த அரிமாவின் உரப்புதல் கேட்டு நடுங்கிய தால் உங்கள் வாயிலிருந்த புல் விழுந்துவிட்டதோ அந்த அரிமா (சிங்கம்) கொல்லப்பட்டுவிட்டது.

எந்தப் புலிகளைக் கண்டு நீங்கள் புதர்களைத் தாண்டி ஓடினீர்களோ அந்தப் புலிகள் வேட்டை யாடப்பட்டு விட்டன.

இனி, நீங்கள் இறைவன் படைத்த இயற்கைப் பூங்காவில் அச்சமின்றி உலாவலாம்; அன்பு செய்து குலாவலாம்.

"புலியின் வாயிலிருந்து புள்ளிமான்களைக் காக்கவேண்டும் என்ற எண்ணம் இப்பொழுதாவது தோன்றியதே! அவர்களுக்கு என் நன்றி.

## 42. ஒரே வீடா ?

"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து." *(குறள் — 126)*

உடம்பு என்னும வீட்டில் ஐம்புலன்கள் என்னும் பெயரில் ஐந்து பேர் குடியிருக்கிறார்கள். இவர்கள் ஒரே வயிற்றில் பிறந்த அண்ணன் தம்பிகளாம்.

மனம் என்னும் தாய்க்கும் அறிவு என்னும் தந்தைக்கும் இவர்கள் அடங்கி நடந்ததே இல்லை. ஐந்து பேரும் ஒற்றுமையாக அடங்கி வாழ்வதும் இல்லை.

ஐந்து பேரும் ஐந்து போக்கில் போய்க்கொண்டிருக்கிறார்கள்.

ஒரே வீட்டில் குடியிருப்பவர்கள் ஒற்றுமையாக இல்லாவிட்டால், அதை ஒரே குடும்பம் என்று எப்படி அழைப்பது?

ஒரு தலைவனுக்கு ஏனையவர் அடங்கியிருப்பது தான் குடும்பம்.

ஐம்புலன்களும் அறிவென்னும் தந்தையின் சொல்லுக்குக் கட்டுப்பட்டு அடங்கி நடந்தால் தான் இதை ஒரு உடம்பு என்று சொல்லமுடியும்.

அறிவுக்கு ஐம்புலன்கள் கட்டுப்பட்டு அடங்காமலிருந்தால் இந்த உடம்பை ஒரு உடம்புக்குள் இருக்கும் ஐந்து உடம்புகள் என்றுதான் சொல்ல வேண்டும்.

ஐந்து உடம்புகள் ஐந்து பக்கம் இயங்கினால் இந்த ஒரு உடம்பு வெற்றுடம்பாய விரைவில் மறைந்துவிடும்.

## 43. நல்லவனாய் இரு; உள்ளதை நுகர்.

**"பண்புடையார் பட்டுண்டு உலகம் அதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்."** (குறள்-996)

ஓர் ஊருக்கு அழகு எது?

ஆறுகளா, ஏரிகளா, அணிவயல்களா, பூஞ்சோலைகளா, தோப்புகளா, தோட்டங்களா, இவைகளில் எவையும் அல்ல.

அந்த ஊரில் வாழும் நல்லவர்களால்தான் அந்த ஊருக்கு நல்ல பெயர் ஏற்படுகிறது. நீ நல்லவனாக இருப்பதே நாட்டுக்குச் செய்யும் தொண்டு. நாட்டுக்கு மட்டுமல்ல; உனக்கு நீயே செய்து கொள்ளும் நன்மை.

நான் சொல்வது புரியவில்லையா ?

நீ நல்லவனாக மட்டும் இரு. நாடும் பயன் பெறும்; வீடும் பயன் பெறும். ஒரே கல்லில் இரண்டு மாங்காய். நல்லவன் நேர்மையானவன்.

அவனால் யாருக்கும் தீங்கில்லை. நல்லவன் பேராசையில்லாதவன். அவனால் யாருக்கும் இழப்பில்லை.

இல்லாததற்காக ஏங்கமாட்டான்; அவன் உள்ளதைக் கொண்டு மகிழ்வான். நல்லவன் அருளாளன். அவனால் பிறர்க்கும் உதவிகள் கிட்டும்.

அன்பின் ஊற்றாகவும் அறத்தின் வேராகவும் விளங்கும் அவனுக்குத் தெய்வமே கோயில் கட்டி விழா எடுத்தால் வியப்புறுவதற்கு ஒன்றுமில்லை.

## 44. நல்லவரும் வல்லவரும்.

**"எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்**
**வேண்டாரை வேண்டாது உலகு."** (குறள் 670)

என்ன உலகம் இது, நல்லவர்கள் பலராக இருக்கிறார்கள்; அவர்களிடம் வல்லமை இல்லை. வல்லவர் சிலராக இருக்கிறார்கள்; அவர்கள் நல்லவர்களாக இல்லையே.

நல்லவர்களைச் சார்ந்து வாழ்ந்து பயனில்லை. வல்லவர்களை நம்பி வாழ்வமைத்துக் கொள்ள முடியாது. அவர்கள் எந்த நேரத்தில் எப்படி மாறுவார்கள் என்று சொல்லமுடியாது.

இராவணன் வல்லவன். அவன் சீதையைக் கவரப்போய் இலங்கை அழிய வழிவகுப்பான் என்று யாராவது முன் கூட்டி அறியமுடிந்ததா?

இதற்குத்தான் உலகில் சான்றோர்களாகத் திகழும் நல்லவர்கள் எல்லாம் வல்லவர்களாகவும் திகழவேண்டும் என்று ஆசைப் படுகிறோம்.

ஆயிரம் பேர் குடியிருக்கும் சிற்றூரில் ஐந்து கள்ளர் இரவு நேரததில் புகுந்து கொள்ளையடிக் கிறார்கள்.

தீமை செய்ய கள்ளருக்கு இருக்கும் துணிச் சலில் பாதியாவது அங்குக குடியிருக்கும் ஆயிரம் பேருக்கு இருக்கவேண்டாமா? ஆயிரம் பேர் கூடி எதிர்த்தால் ஐம்பது கள்வர் என்ன செய்வார்கள்.

நல்லவர்கள் ஒன்று சேர்வதில்லை. வல்லமையை வளர்ப்பதில் ஆற்றலும் பண்பும் ஒருசேர வளர்வ தில்லை. நல்லவர் வல்லவராகும் போது நாடு வாழும்.

## 45. செபமாலை உருட்டும் துறவிகள்.

**"நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து**
**வாழ்வாரின் வன்கணார் இல்."** (குறள்-276)

துறவிகளை எல்லாரும் வணங்குகிறார்கள். இல்லறத்தாரை விட துறவிகள் உயர்ந்தவர் களாம். மெய்யுணர்வு கைவரப் பெற்றவர்களாம். கடவுளைக் கண்ணெதிரில் கண்டவர்களாம்.

அதனால்தான் இல்லறத்தார் அனைவரும் துறவி களைக் கண்டால் அச்சத்தோடும் பணிவோடும் எதிர் கொண்டு அனைத்து வழிபாடுகளையும் செய்கின்றனர்.

துறவிகள் அறநெறிகளை மக்களுக்கு எடுத்துக் கூறுகிறார்கள் உலகம் அறநெறியில் வாழ வழி வகுத்துத் தருகிறார்கள். அது வரவேற்கத்தக்கது.

துறவிகள் மெய்யுணர்வு பெற்றுவிட்டார்களா என்பதையும், இல்லறத்தாரை விட அதிகமாகக் கடவுளைப் பற்றி அறிந்திருக்கிறார்கள் என்பதையும் முழுமையாக நம்ப முடியவில்லை.

ஏனென்றால் நான் கண்ட துறவிகள் தொண்டு கிழவராகி தள்ளாத முதுமை எய்துங் காலம்வரையில் கையில் செபமாலை உருட்டிக் கொண்டேயிருந்தனர்.

இந்நிகழ்ச்சி ஒன்றே அவர்கள் தம் முயற்சியில் இன்னும வெற்றி பெற வில்லை என்பதைக் காட்டு கிறது மெய்யுணர்வு கிட்டியிருந்தால் அப்புறம் மணிமாலைகளை உருட்டுவார்களா ?

## 46. சிற்றூரும் பட்டினமும்.

**"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற."** (குறள்—34)

உங்களுக்குச் சிற்றூர் பிடிக்குமா பெரிய பட்டினம் பிடிக்குமா என்று வழிப்போக்கன் ஒருவன் ஒரு புலவனைக் கேட்டான்.

அதற்கு அந்தப் புலவன், உனக்கு இராமனைப் பிடிக்குமா இராவணனைப் பிடிக்குமா என்று எதிர் வினா தொடுத்தான்.

இராமன் தலைநகரத்தில் கூனிகளும் உண்டு. இராவணன் தலைநகரத்தில் கும்பகருணன், வீடணன் போன்ற நல்லவரும் உண்டு. நீங்கள் எதை வைத்துக்கொண்டு இந்த உவமையைச் சொன்னீர்கள் என்று வழிப்போக்கன் கேட்டான்.

இராமன் தலைநகரையும் இராவணனின் தலை நகரையும பற்றி நான் குறிப்பிடவில்லை. இராம னின் பண்புகளைச் சிற்றூர் வாழ்க்கைக்கும் இராவணனின் பண்புகளை நகர வாழ்க்கைக்கும் ஒப்பிட்டுக் கூறினேன் புரிந்து கொள்க என்று விளககி விட்டுப் புலவர் போய் விட்டார்.

அந்த வழிப்போக்கன் வாழும்வழி தேடி பட்டினததை நோககிப் போய்க் கொண்டிருந்தான். புலவரின் கூற்று அவனுககு மருட்சியுண்டாக் கியது.

நகரம் பேராசையின் உறைவிடம், அதிகாரச் செருக்கின் பிறப்பிடம், ஈவு இரக்கமற்றோரின் சிறப்பிடம். நான் ஏன் அங்குப் போக வேண்டும்? அன்பும் அமைதியும் தவழும் சிற்றூர்க்கே போகிறேன் என்று வழிப்போக்கன் தன் பயணத்தைத் திசை மாற்றிக் கொண்டான்.

## 47. பகைவரின் முரசங்கள்.

"கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை". (குறள் - 765)

பகைவரின் போர் முரசங்கள் அதிர்கின்றன. வெறும் முரசங்கள் மட்டுமா அதிர்கின்றன? களிறுகள் பிளிறும் ஓசைக்குப் பின்னணி போல முரசங்கள் முழங்குகின்றன.

அவை ஆட்குத்தி நெடுங்கொம்பன் யானைகள்; இதற்கு முன் எத்தனையோ கோட்டை மதில்களைக் கொம்புகளாலேயே குத்தித் தரை மட்டமாக்கியவை.

அக்களிறுகள் எடுத்துவைக்கும் ஒவ்வொரு அடிக்கும் இயைய முரசங்கள் முழங்கப்படுகின்றதே.

அந்த எதிரிகளின் படைஞர் யானைப்படைகளின் வலிமை ஒன்றையே பெரிதாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். கடைந்தெடுத்த கோழைகள்!

எங்கள் படையில் யானைப்படைப் பிரிவையே பயன்படுத்தப் போவதில்லை. பகைவரின் யானைப் படைகள் எவ்வளவாயினும் வரட்டும்.

எங்கள் படையில் அரிமா (சிங்கம்) போன்ற படை மறவர்கள் உள்ளனர். அரிமாவின் அறை யானையின் மத்தகத்தில் விழும் வரை மத யானைகளின் ஒவ்வொரு காலடிக்கும் பகைவரின் முரசு முழங்கிக்கொண்டிருக்கும்.

இதோ! எங்கள் மறவர் அந்த யானைகளின் மத்தகத்தில் இடி போன்று தாக்குகிறார்கள். அத்துணை யானைகளும் சாய்ந்து விட்டன.

## 48: பயனுள்ள வாழ்வு.

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.'' (குறள்—45)

மரம் நன்கு தழைத்துச் சிறந்த பழங்களைத் தந்தது என்றால் என்ன பொருள்? அம்மரத்திற்கு உரச்சத்துள்ள மண் அடிப்படையாக இருந்தது; வேருக்கு நீரும் கிளைகளுக்குக் கதிரொளியும் கிட்டின; நோய் உண்டாக்கும் பூச்சிகளும், இலைகளைத் தின்னும் விலங்குகளும் அம்மரத்தைத் தாக்கவில்லை? மரம் வளமாக வளர்ந்தது.

என் கணவர் உயர்ந்த சால்பும் பெருமையும் உடையவராய் விளங்குகிறார் என்றால் அதற்கு முதற் காரணம்:

அவர் பிறந்த குடியும் பழகிய சூழலும் கற்ற கல்வியும் உற்ற நண்பரும் உயர்நிலைப் பண்பட்ட பாங்கினர் என்பதே.

அதனால்தான் என் கணவர் ஈகை, வீரம், இறைப்பற்று இம்மூன்றிலும் தன்னிகரற்று விளங்குகிறார்.

பெற்ற தாயைத் தெய்வமாக வழிபடுகிறார். பெற்ற தாயை வணங்குபவர் கங்கையில் நீராடிய புண்ணியம் பெறுவர் என்று நூல்களும் பேசுகின்றன.

பெற்ற தாயைப் போலவே பிறந்த மண்ணாகிய தாய் நாட்டையும் போற்றிக் காக்கிறார்.

வாழ்வாங்கு வாழும் வெற்றியை இவர் பெற்ற தற்குக் காரணமானவர்களிடம் இன்றும் நன்றி யுள்ளவராக இருக்கிறார்.

## 49. பின்னும் முன்னும் பார்க்க வேண்டாம்.

**"ஒரு பொழுதும் வாழ்வ தறியார் கருதுப**
**கோடியும் அல்ல பல."** (குறள் – 337)

தோழா, உன்னிலையைக் கண்டால் எனக்கு வருத்தமாக இருக்கிறது. உன்னை எப்படித் தேற்றுவது என்று தெரியவில்லை. நீ நெடுங் காலமாகக் கண்ட நெட்டைக் கனவுகள் நனவாக வில்லை. போனவற்றை நினைத்துப் புழுங்குகிறாய் அவை எதிர்காலத்தில் எந்த நாளில் கைகூடும் என்று வானத்தை அண்ணாந்து பார்க்கிறாய். கடந்தகால தோல்விகளை நினைத்து நிலத்தை நோக்கித் தலை கவிழ்கிறாய்.

மேல் நோக்கி வானத்தையும் பார்க்காதே; வருங்காலத்திற்காக வாயைப் பிளக்காதே! கீழ் நோக்கி நிலத்தையும் பார்க்காதே; சென்ற நாட்கள் திரும்புவதில்லை. நீ நீள நினைந்த ஆசைகள் சுமை யாக மாறி உன்னைக் கவிழ்த்துவிட்டன; பின்னுக் கடித்து விட்டன.

அந்தப் பழைய ஆசைகள் என்னும் குப்பைச் சுமையைத் தூக்கி எறிந்து விடு. நான் விரும்புவதே வரட்டும் என்று வரங்கிடக்காதே;

ஏங்காதே. இன்று செய்யவேண்டிய கடமைகளை கருத்தாகச் செய். இப்போதுள்ள நிமிடங்களை செலவழிக்கக் கற்றுக்கொள்; நீ நினைந்ததும் நிறைவேறும், நீ நினைப்பதும் நிறைவேறும்.

## 50. மகிழ்ச்சிக்கோர் வறுமை.

**''விழுப்புண் படாத நாளெல்லாம் வழுக்கினுள்**
**வைக்குந் தன் நாளை எடுத்து.''** (குறள்—776)

போர் வீரர்கள் மீது அரசன் உயிரே வைத்திருக்கிறான். எங்களுக்கு நல்ல அறுசுவை உணவு கிடைக்கிறது. எங்கள் குடும்பத்தார்க்கு மன்னன் நிலங்களைத் தந்திருக்கிறான்.

ஆனாலும் எங்கள் மகிழ்ச்சி குறைந்து வருகிறது. மகிழ்ச்சி முழுதும் மறைந்து மகிழ்ச்சிக்கும் ஒரு வறுமை வந்து விடுமோ என்று அஞ்சுகிறோம்.

மாந்தனின் வாழ்வில் தோன்றும் உயர்ந்த மகிழ்ச்சிகள் இரண்டு: ஒன்று காதலில் கனிவது; மற்றொன்று கடமையில் ஒளிர்வது.

எங்களுக்குக் காதலைப் பற்றிய குறைபாடு இல்லை. கடமையைப் பற்றிய குறைபாடே நெஞ்சை வருத்துகிறது.

அரசனுக்கு நாடில்லை என்றால் அவன் நாடாளும் கடமையை ஆற்றுவது எப்படி

போர் வீரன் அவனுக்கே உரிய தொழிலான போர் வராவிட்டால் தான் பயின்ற தொழிலை ஆற்ற முடியாது.

ஒரு ஓவியன் தான் நினைக்கும் போது ஒரு ஓவியம் வரைந்து அதில் வெற்றி கண்டு மகிழ்கிறான்.

அவரவருக்குத் தெரிந்த தொழில்களைச் சிறப்புறச் செய்து வெற்றி காண்பதில்தான் உண்மையான மகிழ்ச்சி இருக்கிறது.

ஓவியனைப் போல் ஒரு போர் வீரன் தான் நினைக்கும் போதெல்லாம் போர் புரிய முடியுமா ? போர்த் தொழிலைப் போய் ஒரு கடமைக்குரிய தொழிலாக்கி விட்டார்களே; அவர்கள் அறியாமை நிறைந்தவர்கள்.

அழகான வேலைப்பாடுகள் செய்யத்தெரிந்த தச்சனைப் பாலைவனத்தில் குடியேற்றி அவனுக்குப் பாலும் சோறும் பலகாரங்களும் கொடுத்து மகிழ்விப்பதால் என்ன பயன்.

அவனுக்குத் தெரிந்த தொழிலைச் செய்ய வாய்ப்பைக் கொடுத்தால்தானே அவனால் உண்மையான மகிழ்ச்சி கொள்ள முடியும்; தன் திறமையை உலகிற்கு அறிவுறுத்த முடியும்.

தாச்மகாலைக் கட்டியவர்கள், பிரமிடை நிறுவியவர்கள் எல்லாம் வரலாற்றில் நிலைத்து விட்டார்கள். அவர்கள் ஒவ்வொரு நாளும தம்

செயல் திறனைக் கண்டுகொண்டு மகிழ்ந்திருப்பர். அவர்களின் மகிழ்ச்சிக்கு வறுமை வருவதில்லை.

போர் வீரர்கள் நாள்தோறும் தம் போர்த் தொழிலைச் செய்யமுடியாது அதனால்தான் எங்களுக்கு மகிழ்ச்சி வறுமை வந்துவிட்டது.

## 51. செல்வம் தேடிவரும்.

**"ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா**
**ஊக்கம் உடையான் உழை."** (குறள் — 594)

எனக்கு நற்பேறு (அதிருஷ்டம்) இல்லாமலிருக்கட்டும்; கோள்நிலை (கிரகங்கள்) தகுந்த பலனை அளிக்காமல்தான் இருககட்டும்.

இவற்றால் எல்லாம் நான் சோர்ந்து விடமாட்டேன். வாழமுடியாதே என்று மனந்தளர்ந்து உட்கார்ந்து விடமாட்டேன், எந்த ஆற்றலும் என்னிடமுளள பெருமை, உரம், ஊக்கம், உழைப்பு ஆகிய நற்பண்புகளை எனனிடமிருந்து பிரித்து விட முடியாது.

நான் என் கடமையையே உயிராகக் கருதுபவன். முன்னேற்றத்திற்குரிய பாதையில் அடியெடுத்து வைத்துவிட்டேன். இனி ஒரு நொடியும் ஓய்வின்றி உழைத்துக் கொண்டே இருப்பேன்.

வேண்டுமானால் பார்த்துக்கொண்டே இரு. எல்லாச் செல்வங்களும் என்னுடலை ஒட்டி நிறகும ஆடைகளைப் போல் என்னைச் சூழ்ந்து நிற்கும்;

விலகாது காத்து நிற்கும். அப்பொழுது என் தோற்றம் காண்போரைக் கவரும்.

## 52. எப்பொழுதும் கொடுப்பவனுகவே இரு

**"நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம்**
**இல்லெனினும் ஈதலே நன்று."** (குறள்—222)

நீ எப்போதும் பெருமையை விரும்பினுல் பிறர்க்குக் கொடுப்பவனுகவே இரு. சிறுமையை விரும்புபவனுக இருந்தால் பிறரிடம் ஒன்றைக் கை நீட்டிப் பெறுபவனுக இரு. உலகில் ஒரே நிமிடம் வாழ்ந்தாலும தேனடையாக வாழ்ந்துவிடு; தெருப் புழுதியாக மிதி படாதே; இரப்பதனுல் உள்ள இழிவு பொறுத்துக கொள்ளக் கூடாதது

உங்களைக் காக்கும் கடவுளான நெடுமாலே ஒருவனிடம் (மாவலி) இரப்பதற்காகக் கூனிக் குறுகி குள்ளனுகிவிட்டான். சீ! ஒருவரிடம் கை நீட்டி ஒன்றைக் கேட்டுப்பெறுவதும் ஒரு வாழ்வா?

வானம் மழை தருகிறது வையம் பயிர் விளைக் கிறது. சிறு புல்லும் பனித்துளியை ஏந்தி பகல வனுக்குப் பரிசளிக்கிறது. சின்னஞ்சிறு பூக்கள் ஊசிமுனையினும் சிறிய அளவு தேனை வண்டு களுக்கு வாரி வழங்கி மகிழ்ச்சியால் முறுவலிக் கின்றன. உன்னுல் ஒரு அணுவேனும் பிறர்க்கு உதவமுடியாதா என்ன?

## 53. போரின் முடிவு அறிந்துவா.

"இழைத்தது இகவாமை சாவாரை யாரே
பிழைத்தது ஒறுக்கிற் பவர்." (குறள்-779)

தோழி! போர்க்களத்தில் போர் முடிந்து விட்டதுபோல் தெரிகிறது வெற்றி முரசுகள் ஒலிக்கின்றன. யார் வென்றார்கள் என்று எனக்குச் சொல்லாதே. வென்றவர் பகைவராயின் அந்த அதிர்ச்சியை என்னால் தாங்கிக்கொள்ள முடியாது.

யார் தோற்றார்கள் என்று மட்டும் அறிந்துவா; விரைந்து வா; காலந்தாழ்த்தாதே. தோற்றவர் யார் என்று அறிய விழைவது ஏன்? இதுதானே உன் தயககத்திற்குக் காரணம்.

தோற்றவர் பகைவர் எனின் என் தலைவரே வென்றார் என்று எளிதில புரிந்து கொள்ளலாம். தேற்றது நம் படைதான் எனின என் தலைவர் உயிரோடு இல்லை என்று பொருள்.

ஆதலால் விரைந்துபோய் பகைவர் தோற்றார் அல்லது என் தலைவர் தன் உயிரைத் தோற்றார் என்னும் செய்திகளில் இரண்டில் ஒன்றை அறிந்துவா.

## 54. உயர்வும் பணிவும்.

"பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து". (குறள்—978)

ஊக்கமுடையவன் உயர்வு பெறுவதற்கு தாமரைக் கொடியை உவமையாகச் சொல்கிறார்கள். தண்ணீரின் மட்டம் உயர உயர தாமரைக் கொடியும் நீண்டுயர்கிறது.

ஆனால் ஊக்கத்தால் உயர்ந்தவர்கள் நிமிர்ந்தே வாழ முடியாது, அப்படி வாழவும் கூடாது.

அவரைக் கொடிக்குப் பந்தலிடுகிறார்கள்.

அது எந்த அளவுக்குப் பந்தலிடுகிறார்களோ அந்த அளவுக்கு உயர்கிறது.

பந்தலிடாத போது அருகிலிருந்த மரத்தின் கிளைகளில் தாவிப்படர்கிறது.

இத்தகைய கொடிகள் எவ்வளவு உயரம் உயர்கிறதோ அந்த அளவுக்கு வளைந்து கொடுக்கவும் தெரிந்து கொண்டிருக்கின்றன.

அதனால் சூறாவளிக் காற்றால் தன்னைத் தாங்கிய மரம் சாய்ந்தாலும் இன்னும் அவரைக் கொடி பசுமையாகவே பூத்துக் காய்த்துப் பயன் தந்து கொண்டிருக்கிறது.

உயர்ந்து விட்டோம் என்பதால் பணிவில்லாமல் இருக்காதீர்கள்.

உங்கள் பணிவுடைமை உங்கள் மேம்பாட்டைக் காப்பாற்றும் என்பதறிவீர்களாக.

## 55. பெருமையும் புகழும்.

"குணநலம் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத் துள்ளதூஉம் அன்று." (குறள்—982)

பணக்காரர்களுக்கு வேண்டிய தெல்லாம் கிடைக்கிறது. இந்த உலகத்தையே அவர்கள் விலை பேசுகிறார்கள்.

பணத்தால் ஏற்பட்ட பகட்டு அவர்களின் தோற்றத்தில் பளபளக்கிறது.

ஆனால், உண்மையான சால்பும் பெருமையும் பணத்தால் வாங்க முடியாதவை. அவை பணக்காரர்களின் கைக்கு எட்டாதவை.

ஆனால், குடிசையில் வாழும் பண்பாளன் கையில் அவை தாமாகப் போய்ச் சேர்ந்து விடுகின்றன.

நற்றாமரைக் குளத்தில்தான் நல்லன்னம் தங்கியிருக்கும்.

அறஞ்சார்ந்த நெஞ்சில் தான் சால்பும் பெருமையும் தங்கும்.

சால்பும் பெருமையும் தன்பால் கொண்டவன் ஏழையானாலும் இமயமலை போன்ற உயர்வைப் பெற்று விடுகிறான்.

வானில் வலம் வருபவர்களுக்கும் மண்ணில் மாட மாளிகைகளில் ஏறிப் பார்ப்பவர்களுக்கும் இமயமலையின் நெடுமுடிக்குவடுகள் திகைப்பையும் மருட்சியையும் உண்டாக்குகின்றன.

தன்னையறியாமல் போற்றுகிறார்கள்; வணங்குகிறார்கள்.

## 56. மெய்வருத்தக் கூலி தரும்.

**"தெய்வத்தா னாகா தெனினும் முயற்சிதன்**
**மெய்வருத்தக் கூலி தரும்."** (குறள்—619)

உடலை மூடினால் நாறுகிறது; எரித்தால் சாம்பலாகிறது; சாம்பல் வளரும் செடிகளுக்கு எருவாகிறது.

நாறும் உடலிலும் நல்லது கிடைக்கிறது; உடம்பை வருத்தினால்.

உலகம் துன்பமானது என்று சொல்பவர்கள் சொல்லிக் கொண்டே இருக்கட்டும்.

நாம் அதிலுள்ள துன்பங்களையே வடிவு மாற்றி இன்பம் காண்போம்.

இவ்வுலகில் வாழ்வதால் ஒரு பயனுமில்லை என்று சொல்பவர்கள் சொல்லிக் கொண்டே இருக்கட்டும்.

பயனில்லாத வாழ்வில் பயன்படும் பகுதிகளைப் பரிசுப் பொருளாக்கி அவர்களுக்கு அளிப்போம்.

இவ்வுலகம் தீவினையாளர்களின் உறைவிடம் என்று சொல்பவர்கள் சொல்லட்டும்.

தீவினையாளரைத் தூயவர்களாக மாற்றும் முயற்சியில் எந்த அளவுக்கு வெற்றிபெற முடியும் என்பதை அவர்களுக்கு அறிவுறுத்துவோம்.

## 57. வள்ளல்கள் அரண்மனையில்தான் இருப்பார்களா ?

**''விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா**
**மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று''**

(குறள்—82)

என் கணவரும் ஒரு வள்ளல். ஆனால் நாங்கள் இருப்பதோ சிறு குடிசை. அம்மா பசி என்று வருகின்ற ஏழைகள், பசியாலும் நீர் வேட்கையாலும் காதடைத்துப் போய் கதவைத் தட்டிச் சோறு கேட்கும் வழிப்போக்கர்கள்.

இவர்களெல்லாம் எங்கள் வீட்டுக்கு வழக்கமான விருந்தாளிகள்.

ஏன் காக்கை குருவிகளும் கூட எங்கள் வீட்டுக்கு அன்றாடம் வரும் விருந்தாளிகள்.

வேற்றூரிலிருந்து சில சமயங்களில் படித்தவர்களும் துறவிகளும் வருகிறார்கள்.

அவர்கள் அரண்மனை எங்கிருக்கிறது. செல்வர்களின் மாளிகைகள் எங்கிருக்கின்றன என்று எங்களைக் கேட்கிறார்கள்.

நாங்களும் வழிகாட்டுகிறோம்.

அவர்கள் எங்கள் குடிசையில் தான் உண்டு விட்டுப் புறப்படுகிறார்கள்.

மீண்டும் திரும்பி வரும்போதும் இவ்வழி யாகத் தான் வருகிறுர்கள்.

அவர்கள் திரும்பிவரும் போதும் எங்கள் குடிசையில்தான் உண்கிறுர்கள்.

அரசனும் செல்வனும் அவர்களுக்குக் கொடுத்த பொன்னையும் பிற பரிசுப் பொருள்களை யும் வயிற்றுப் பசிக்கு அவர்களால் உண்ண முடி யாது என்று எங்களுக்குத் தெரியும்.

## 58. ஒரே இடத்தில் நிற்கிருன்.

**"விழித்த கண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின்**
**ஒட்டன்ருே வன்க ணவர்க்கு."** (குறள்—775)

போர் கடுமையாக நடக்கிறது. யானைப் படை கள் மேகக் கூட்டங்களைப்போல் மோதுகின்றன.

தேர்ப் படைகள் மலைகளைப்போல் அடுக்கடுக் காக விரைகின்றன.

குதிரைப் படைகள் கடலலைகளைப் போல் தாவுகின்றன.

போர் வீரர்களின் தலைகள் பனங்காய்களைப் போல் உருளுகின்றன.

இப்படி எல்லாரும் பஞ்சாய்ப் பறந்து ஓடி ஓடிப் போர் புரியும் போர்க்களத்தில்—

அதோ! என் கணவர் அதே இடத்தில் சிறி தும் நகராமல் நின்றிருக்கிருர். வருகின்ற படை

களையெல்லாம் தன் அம்புகளுக்கு இரையாக்கிக் கொண்டிருக்கிறார்.

அவருக்கு ஒப்பான வீரர் இருந்தால் தானே தன்னிடத்தை விட்டுப் பெயர்ந்து வரவேண்டும.

அவர் நின்ற இடத்திலிருந்து கொண்டே வென்றியைக் குவிப்பார்.

வீரத்தின் உச்சிக் கொடுமுடி அவர்.

## 59. வழுக்கைத்தலை.

**"சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை".** (குறள்—990)

அவருக்கு அகவை (வயது) முதிர்ந்து விட்டது.

அது மட்டும் அன்று; பட்டறிவு முதிர்ந்திருக்கிறது; பண்பாடு பழுத்திருக்கிறது; தலையும் நரைததிருக்கிறது.

பல ஆண்டுகளாகவே அவர் துறவிபோல் காணப்படுகிறார்.

காவி அணியாத இல்லறத் துறவி;
கமண்டலம் ஏந்தாத கடமைத் துறவி;

அன்புக்குரிய மனைவியும் ஆசைக்குரிய குழந்தைகளும் அவருக்கு உள்ளனர்.

புலனின்பங்களை அவர் எப்பொழுதோ மறுத்து விட்டார்.

அவர் வணங்கத் தக்கவர். அவர் மனைவி போற்றத்தக்கவர் அவர் பிள்ளைகள் பாராட்டத் தக்கவர்.

அவருக்கு நடுப்பருவத்திலேயே தலையின் மேற்பகுதி வழுக்கையாகி விட்டது.

அவர் புலனின்பங்களை வெறுத்து ஒழுக்க நெறி நிற்கும் பொருட்டு, ஊழ் (விதி) அவர் தலையை மழித்து விட்டது.

அந்த ஊழ் (விதி)க்கடவுள் பல்லாண்டு வாழ்க

## 60. கொடியவனின் வீழ்ச்சி.

''தீயவை செய்தார் கெடுதல் நிழல் தன்னை
வீயாது அடியுறைந் தற்று'' (குறள்—208)

நண்பா, வலிமை தான் வாழ்வு என்கிறாய் ஒப்புக் கொள்கிறேன். தனக்கு எவருக்குமில்லாத வலிமையும் தலைமையும் இருக்கிறது என்பதால் தீச்செயலும் கொடுமையும் செய்யத் துணிபவர்கள் தம கண் முன்னாலேயே தம் வீழ்ச்சியின் கொடுமையை உணர்கிறார்கள்.

நல்லவர்கள் வீழ்ச்சியடைவதில்லையா? தாழ்வு அவர்களைத் தழுவவில்லையா என்று கேட்க வேண்டாம். நல்லவர்கள் பொன் போன்றவர்கள்; பொற்குடம் உடைந்தால் பொன்னாகும். தீயவர்கள் மண் குடம் போன்றவர்கள்; மண்குடம உடைந்தால் மண்ணோடும் மண்ணாக முடியாது. மீண்டும் குட

முமாகாது. இது உனக்குத் தெரிந்ததே. உனக்குத் தெரியாத ஒன்றைச் சொல்கிறேன் கேள்.

தீயவன் யாருக்காகக் கொடுஞ்செயல் புரிகிறான். தன தன்னல நுகர்ச்சிகளுக்குப் பற்றுக் கோடான மனைவி மக்கள் சுற்றம், கோட்டை கொத்தளம் கொள்ளைச் செல்வம், கொடுங் கண் மறவர் படை இவற்றைச் சேர்க்கத் தானே! வரலாற்றைப் புரட்டிப்பார். கொடுங்கோல் மன்னர் தாம் சேர்த்தவற்றைத் தம கண் முன்னாலேயே இழந்திருக்கின்றனர் தன்னைச் சார்ந்தவர்கள் அனைவரும் மாண்டு மண்ணாவதைக் கண்ணாரக் கண்டு புண்ணாகித் துடித்துப் பதறியிருக்கின்றனர்.

அதோ! அந்த மலையுச்சியில் ஒரு பெரிய பாறாங்கல் செங்குத்தாக நின்றிருந்ததே. நினைவிருக்கிறதா? அது நேற்று உருண்டு விழுந்து உடைந்து சிதறி விட்டது. அது உருண்டு வந்த பாதை இன்னும் அந்த மலையில் தெரிகிறது. தன் வீழ்ச்சியைத தடுத்த அத்தனைக் கற்களையும் மரங்களையும் பொடிப்பொடியாக்கி விட்டு, தனக்கு ஆதரவானவை எல்லாம் தூளான பிறத மற்றொரு பெரியபாறை மீது தடாலென வீழ்ந்து சுக்கு நூறாகி விட்டது.

அந்தச் செங்குத்துப் பாறையின் வீழ்ச்சியால் அதன் நிழலிலிருந்த செடிகொடிகள் விலங்குகள், பறவைகள், நீர்நிலைகள் எல்லாம் அழிந்து விட்டன. கொடிய அரசன் வீழ்ச்சியால் அவன் நிழலி

லிருந்த மக்களும் அல்லவா வீழ்ச்சியடைகிறார்கள். தன்பால் அன்பு கொண்ட அனைவரையும் தன்னை யறியாமலேயே தன் வீழ்ச்சிக்கை (கரம்) அழித்துக் கொண்டு போவதை அவனால் தடுத்துக்கொள்ள முடியவில்லை. ஏனென்று சொல்வாயா? இதிலி ருந்து நல்லன மட்டுந்தான் செயத்தக்கன என்றுணர்.

## 61. நல்லவர்க்குப் பரிசு வறுமையா ?

**"இருவே றுலகத் தியற்கை திருவேறு**
**தெள்ளிய ராதலும் வேறு."** (குறள்—374)

சீரும் சிறப்புமாய் செல்வ வளத்தோடு வாழ்ப வர்களையெல்லாம் பார்த்துப் பெருமூச்சு விடு கிறாய். அவர்களிடம் செல்வம் நிறைந்துள்ளது, உன்னிடம் அறிவும ஆற்றலும அளப்பரிய பெருமையும் புகழும் மண்டியுள்ளன. ஆனால உன் வள்ளன்மை உளளத்தினியல்பால் வறுமையும் அண்டியுள்ளது என்பதை மறுக்க முடியாது.

வீரருள் வீரனே! அங்கே திரும்பிப்பார். அந்தக் கூட்டிலுள்ள அரிமாவை (சிங்கத்தை) உயிரோடோ அல்லது இறந்த பின்னோ விற்றால் யாராவது பணம் கொடுத்து வாங்கிக் கொள்வார் களா? அரிமாவினைக் கண்டு வெருண்டோடுகிறது யானை. இருந்தாலும் இறந்தாலும் அதனை ஆயிரம் பொன் கொடுத்து வாங்கப் பலர் முன்வருவார்கள். அரிமாவிற்கு ஆற்றல் தான் பெருமை. வீரனுக்கும்

அறிவாளிக்கும் புகழ் தான் சேரும்; செல்வம் சேராது.

## 62. உன்னைத்தான் நம்பியிருக்கிறேன்.

"இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தை
குற்ற மறைப்பான் உடம்பு" (குறள்—1029)

வெள்ளைக் காளையே! நுகம் பூண்

உன்னைத்தான் நம்பியிருக்கிறேன். இந்த வண்டியிலுள்ள விலை மதிப்புள்ள பண்டங்கள் ஊர் போய்ச் சேர நீதான் உதவி புரியவேண்டும்.

மற்ற காளைகள் சோர்ந்து விட்டன. சோர்வும் களைப்பும் உனக்கும் வரும் என்றாலும் உன்னால் அச்சோர்வைச் சிறிது நேரத்தில் ஊக்கமாக மாற்றிக் கொள்ளமுடியும்.

நீ மேட்டைக் கண்டு அஞ்ச மாட்டாய்; பள்ளத்தைக கண்டு ஓட மாட்டாய்; கல்லைக் கண்டு தயங்க மாட்டாய், முள்ளைக் கண்டு கலங்க மாட்டாய்.

உன்னைப் போன்ற உழைப்பாளர்களால் தான் உருப்படியான நற்செயல்களைச் செய்யமுடியும்.

எல்லாத் துன்பங்களையும் தாங்கிக் கொண்டு பிறர்க்கு நன்மை செய்யும் தெய்வப் பிறவி நீ

வடவைத்தீ எரிந்தாலும் மேகங்கள் குடித்தாலும் கடலில் உள்ள நீரின் அளவு குறைவதே இல்லை.

இதைப் போலவே வண்டிக்காரன் அடித்தாலும் வாலை முறுக்கினாலும்; காலில் முள் தைத்தாலும் மேட்டில் காலூன்றி முட்டி தேய்ந்தாலும் நீ எப் போதும் ஒரே சீராக இருக்கிறாய்.

உன்னை எவ்வளவு போற்றினாலும் தகும். உண்மையான உழைப்பாளர்களை இந்த உலகம் என்று தான் மதிக்கப் போகிறதோ!

## 63. அரிமாவுக்கா (சிங்கத்திற்கா) ஒப்பிடுவது!

**"என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை**
**முன்னின்று கன்னின் றவர்"** (குறள்—771)

போரில் பெருவெற்றியெய்தி என் கணவர் வீடு திரும்பினார் வாகை சூடிய அவருக்கு அரண் மனைக் கொலுமண்டபத்தில் பலர் பூமாலை சூட்டினர், பரணி பாடினர், பாராட்டுத் தெரிவித் தனர், புகழ் மாலைகளைப் புதிது புதிதாகப் புனைந்து சூட்டினர்.

அத்தனைப் புகழ் மாலைகளும் பரணிப் பாடல் களும் என் காதில் விழுந்தன. பல புலவர்கள் என் கணவரை அரிமாவுக்கு ஒப்பிட்டும் பாடியிருந் தார்கள்

எனக்கு அந்த உவமை பிடிக்கவில்லை. இதைக் குறிப்பாய் உணர்ந்த என் கணவா உவளகத்தில் (அந்தப்புரத்தில்) என்னைக் கண்டு காரணம் வினவினார்.

'அரிமா வலிமையும் திறமையும் உள்ளதாகலாம் எனினும் அது ஒரு விலங்கு தானே! அதற்கு, உங்களை ஒப்பிடுவது எனக்குப் பிடிக்கவில்லை.

இரண்டாவது, அரிமாவால் தாக்கப்படுபவை தனி விலங்குகள். அவை நாற்படையுடனா நிற்கின்றன?

ஆனால் தாங்கள் தனியொருவராய் கூட நின்று பகைவரின் நாற்படைகளையும் கொன்று குவித்து வெற்றிவாகை சூடுகிறீர்கள். அரிமா படைக்கலங் களைக் கையிலேந்திய விலங்குகளையா தாக்கு கிறது?

எனவே உங்களுக்கு உங்களையே உவமை யாகச் சொல்வது தான் பொருந்தும் என்றேன் அவர் எனக்கு முத்தம் பரிசளித்தார்.



# அடுத்து வெளிவர விருக்கும்

## நூல்கள்

1. தொல்காப்பியர் கண்ட இந்தியா
2. சிலப்பதிகாரம் பதினென்றும் நூற்றுண்டுக் காப்பியமா ?
3. பழந்தமிழில் மக்கட்பெயர்
4. தமிழ்ப் பண்பாட்டின் தனிச் சிறப்புகள்
5. ஒரு பூமாலையின் பாமாலை
6. சொற்கள் சொல்லும் கதைகள்
7. மறைந்து போன தமிழ்ச் சொற்கள்
8. குறள் விளக்கக் கட்டுரைகள்